# செந்தமிழ்ச் செல்வி




சிலம்பு-௫௯ தி. வ. ஆண்டு-௨௦௧௬ தை பரல்-௬

பிப்பிரவரி 1985

## "செந்தமிழ்ச் செல்வி"

(செந்தமிழ்த் திங்கள் வெளியீடு)


இதழாசிரியர் கூட்டத்து உறுப்பினர்கள்

க. முனைவர் ச. வே. சுப்பிரமணியம், எம்.ஏ., பி.எச்.டி.
இயக்குநர், உலகத்தமிழ் ஆராய்ச்சி மன்றம், சென்னை.

உ. முனைவர் தமிழண்ணல், பேராசிரியர்,
மதுரை, காமராசர் பல்கலைக் கழகம், மதுரை.

ங. பேராசிரியர் ச. அகத்தியலிங்கம், மொழித்துறைத் தலைவர்,
அண்ணாமலைப் பல்கலைக் கழகம், அண்ணாமலை நகர்.

ச. முனைவர் பொன். சௌரிராசன், தமிழ்த்துறைத் தலைவர்,
திருவேங்கடவன் பல்கலைக் கழகம், திருப்பதி.

ரு. முனைவர் பொன். கோதண்டராமன், உதவிப் பேராசிரியர்,
தமிழ்த்துறை, சென்னைப் பல்கலைக் கழகம்.

சு. முனைவர் கு. பரமசிவன் எம்.ஏ., பிஎச்.டி.,
தமிழ்த்துறைத் தலைவர், அமெரிக்கன் கல்லூரி, மதுரை.

எ. பேராசிரியர் கு. சுந்தரமூர்த்தி, எம்.ஏ.
முதல்வர், செந்தமிழ்க் கல்லூரி, திருப்பனந்தாள்.

அ. முனைவர் சொ. சிங்காரவேலன், எம்.ஏ., டிப்.லிங்., பிஎச்.டி.
மயிலாடுதுறை

கு. கழக இலக்கியச் செம்மல் புலவர் இரா. இளங்குமரன்,
ஆய்வாளர், தமிழியற்புலம்,
மதுரை-காமராசர்-பல்கலைக்கழகம்,
அழகர் கோயில் சாலை, மதுரை-2.

க0. முனைவர் வீ. ப. கா சுந்தரம், தமிழியல்புலம்,
மதுரை காமராசர் பல்கலைக் கழகம், மதுரை.

நிறுவனர் : தாமரைச்செல்வர் வ. சுப்பையா.
ஆசிரியர் : இரா. முத்துக்குமாரசாமி, எம்.ஏ., பி.லிப்.


---

# உள்ளுறை

ACC.NO. 38109 15.2/85

செந்தமிழ்ச் செல்வி
திங்கள் வெளியீடு

சிலம்பு-ருசு    தி. வ. ஆண்டு உ0கசு, தை    பரல்-சு
பிப்ரவரி 1985

---

# தமிழ் வளர்த்த தாமரைச்செல்வர்

கழக மேனுள் ஆட்சியாளர் செந்தமிழ்ச்செல்வர், தாமரைச் செல்வர் வ. சுப்பையா பிள்ளை அவர்கள் மறைந்து 1985 சனவரித் திங்கள் 24ஆம் நாளுடன் ஈராண்டுகள் கழிந்துவிட்டன. காலம் கடிது செல்கின்றது. தமிழுக்கு உழைப்பதையே தம் உயிர்ப் பணி யாகக் கொண்டிருந்த அவர் ஆற்றிய நிலையான தொண்டுகள் அளப் பரியனவாம்.

தனித்தமிழியக்கத் தந்தை மறைத்திரு மறைமலையடிகளார், கழக நிறுவனர் வ. திருவரங்கனுர் ஆகிய இருவர் வழியிலும் இறுதி வரை வழுவாது நின்று சைவத்திற்கும் தமிழுக்கும் பெருந்தொண்டு ஆற்றி வந்தார் அவர்.

வ. சு. அவர்கள் இல்லையேல் கழகம் என்ற ஒரு நிலையான தமிழ் நிறுவனம் காலூன்ருது போயிருக்கும். நூல்கள் விற்பனை என்ற ஒன்றை மட்டுமே கருத்தில் கொண்டு எளிதில் விற்பனையாகக் கூடிய பொழுது போக்கு நூல்களைக் கழகம் வெளியிட முற்பட்டிருப் பின் இன்றுள்ள பதிப்பகங்களில் அதுவே நிலையான இடத்தைப் பெற்றிருக்கும். எனினும் இலக்கியம், இலக்கணம், சமயம், புதுப் புதுத் துறைகளில் தமிழ்நூல்கள் என்று தமிழுக்கு ஆக்கம் தரக் கூடியனவும் தமிழின் பெருமையை நிலைநாட்டக் கூடியனவுமான பணிகளையே அவர் ஆற்றி வந்தார்.

ஆறுமுகநாவலர், சி. வை. தாமோதரம் பிள்ளை, உ. வே. சாமி நாதையர் போன்ற பேரறிஞர்கள் பதிப்புத் துறையில் தம்மால் இயன்ற பழந்தமிழ் நூல்களை மட்டுமே பதிப்பிக்க முடிந்தது. இவர்கள் இல்லையேல் பழந்தமிழ் நூல்கள் அழிந்துபோயிருக்கும். இவர்கள் வழியில் நின்று பழந்தமிழ் இலக்கிய, இலக்கண நூல்கள்

முழுவதையும் ஒரு சேரப் பதிப்பித்த பெருமை ஐயா வ. சு. அவர்களையே சாரும். பழந்தமிழ் நூல்களைக் காத்த பெருமை முன்னவர்களுக்கு உண்டென்றால் அவற்றைத் தமிழ் கூறு நல்லுலகெங்கும் பரப்பிய பெருமை பின்னவரைச் சாரும். அத்துடன் காலத்துக்கேற்ற புதுப்புதுத் துறைகளில் தமிழ்நூல்களை அவர் வெளியிட்டார்.

அமெரிக்க நாட்டுத் தமிழறிஞர் பிராங்க்ளின், செக் நாட்டுக் கமில் சுவலபில், ருசிய நாட்டு ருதின் எனும் செம்பியன், ஆங்கில நாட்டு ஆஷர், சப்பானிய நாட்டு மட்சுனகா—இவர்களைப் போன்ற நூற்றுக்கணக்கான மேனாட்டுக் கீழைநாட்டு அறிஞர்கள் தத்தம் தமிழறிவு வளரக் கழக நூல்களே துணையாயிருந்தன என்று சான்று பகன்றுள்ளனர்.

இன்றும் தமிழில் நல்ல நூல்களுக்கு, மலேசியா, சிங்கப்பூர், இலங்கை, ஆப்பிரிக்க நாட்டுத் தமிழர்கள் கழகத்தையே நாடி வருகிறார்களென்றால் அதற்குக் காரணம் ஐயா வ. சு. அவர்கள்தாம்.

திருநெல்வேலி, சைவ வேளாளர் குடும்பத்தில் தோன்றிய அவர் சாதி, சமயங் கடந்து தமிழ்ப் புலமையைத் தேடி வளர்த்தார். அறிவும் புலமையும் எங்கிருந்தாலும் அதை நாடித் தேடிச் சென்று அவற்றை வெளிப்படுத்தினார்.

நெல்லை மாவட்டத்தில் சைவ வேளாளர்கள் நடத்திய சைவ சபைக் கூட்டத்தில் ஒருங்குண்ண வாய்ப்பளிக்காத நிலையில்தான் மறைத்திரு. மறைமலையடிகளார் ‘சாதி வேற்றுமையும் போலிச் சைவரும்’ எனும் நூலையே எழுதினார். அந் நிலையில்தான் ஐயா அவர்களின் தமையனார் திருவரங்கனார் அடிகளாரின் மகளாரான நீலாம்பிகையை மண முடித்தார். கலப்புத் திருமணத்திற்குப் பொற் பதக்கம் கொடுக்காத காலம் அது. ‘எட்டி. நில்’ என்று தமிழர்கள் தமிழகத்து வீதிகளிலேயே ஒதுக்கி வைக்கப்பெற்ற காலம் அக் காலம்!

தமையனார் வழியில் தளராது நின்ற தம்பியார், தமிழறிஞர்கள் தமிழகத்தின் எந்த மூலை முடுக்கில் இருந்தாலும் அவர்களை அழைத்து நூலெழுதச் செய்து அவர்களின் நுண்மாண் நுழை புலத்தை நாட்டார் அறிந்து போற்றும் வழி வகை கண்டவர் ஐயா வ. சு. அவர்களே.

ந. மு. வேங்கடசாமியார், பண்டிதமணி, பாவாணர், மகிழ்நன், சு. அ. இராமசாமிப் புலவர், பெருமழைப் புலவர், என். கே. வேலன் போன்ற பேரறிஞர்களின் பேராற்றலைத் தமிழகத்துக்குப் பயன்படுமாறு அரங்கேற்றச் செய்தவர் அவர்.

இப் புலவர் பெருமக்கள் பெயர்கள் மட்டும் தமிழகத்திற்குத் தெரியுமே தவிர இவர்கள் எச் சமயத்தைச் சார்ந்தவரென்றோ எந்தச் சாதியைச் சார்ந்தவரென்றோ தமிழர் யாரும் அறிய மாட்டார். ஒரு சிலரைப்பற்றித் தெரிந்திருந்தாலும் அதைப் பெரிதாகப் பொருட் படுத்த மாட்டார். சாதிப்பற்று இல்லாமலிருக்கலாம். சிலருக்குச் சமயப்பற்று இருக்கும். ஐயா வ. சு. அதையும் பொருட்படுத்த மாட்டார். இவையின்றி உணவு முறையாலும் மாறுபட்ட தமிழறிஞர்கள் உண்டு. அதையும் அவர் பொருட்படுத்தியதில்லை. தமிழ் அறிவுக்காகவும் புலமைக்காகவும் வள்ளலார் முதன்முதல் பேசிய மறைமலையடிகளார் நூலகத்திற்குப் புலவர் விரும்பியவாறு உணவை வரவழைத்துத் தந்து புலவரைப் போற்றிய புரவலர் ஐயா வ சு. அவர்கள்.

ஒல்லும் வகையெல்லாம் தமிழ்த் தொண்டாற்றி மறைந்த ஐயா வ. சு. அவர்களின் நினைவைப் பாதுகாக்கும் நோக்கத்தோடு, அவர் விட்டுச் சென்ற கழகத்தையும் கழக அற நிலையங்களையும் சிந்தைக்கினிய செந்தமிழ்ச் செல்வியையும் அகப்புறப் பகைகளினால் அழியாது காப்பதையே நம் தலையாய கடனாகக் கொண்டு வாழ்வோமாக.



## தமிழுக்கே உழைக்கத்தக்க பெருநல்லான்

திருநெல்வே லிச்சைவ சித்தாந்த
நூற்பதிப்புக் கழகம் போலும்
ஒருநல்ல தமிழ்வளர்க்கும் நிறுவனமும்
கண்டதில்லை உலகில்! அந்த
உரைமல்கு நிறுவனமும், முப்போதும்
தமிழுக்கே உழைக்கத் தக்க
பெருநல்லான் தமிழ்ப்புல்வன் சுப்பையன்
போற்பிறரைப் பெற்றதில்லை.

பாவேந்தர் பாரதிதாசன்.

# *தாயிரக்கம் கொண்டு தமிழ்காத்தார்

[பேராசிரியர் சிவ. சிவராமலிங்கம், எம். ஏ.
சென்னை.]

ஆட்சியாளர் சுப்பையா அரங்கர் அந்நாள்
அரும்பாடு பட்டிந்தக் கழகம் தோற்றி
மாட்சிமையாய் வளர்தற்கு வழிகள் கண்டார்
மணித்தமிழும் சைவமுமே வாழ்வாய்க் கொண்டார்
காட்சிக்கும் கருத்துக்கும் விருந்து நல்கும்
கணக்கில்லா உயர்நூல்கள் பதித்து வந்தார்
மீட்சியின்றி மிகமெலிந்த மொழியும் நன்கு
மேன்மையுற்று வளங்கொழிக்கப் பணிகள் செய்தார்!

இத்தகைய கழகமொன்று தோன்றிச், செம்மை
இயக்குநராய்ச் சுப்பய்யா இருந்து தொண்டு
நித்தமிங்கே ஆற்றியிரா விட்டால் உள்ள
நிலைமையினை ஒருசற்றே நினைத்துப் பார்ப்பீர்!
புத்தம்புதுத் தமிழ்நூல்கள், சங்க நூல்கள்
புகழ்ச்சமய நெறிநூல்கள், நீதி நூல்கள்,
சத்துடைய தமிழ்நூல்கள், சார மான
தரமுடைய இலக்கணங்கள் இலக்கி யங்கள்,

சிறுவர்க்காம் தனிநூல்கள், சிறந்தோர் செய்த
செப்பரிய சொற்பொழிவு வரிசை நூல்கள்,
வெறுமையிலா அகராதி நிகண்டு நூல்கள்,
வீறுடைய தமிழ்ப்புலவர் வரிசை நூல்கள்,
மறுவறுநல் மொழிபெயர்ப்பு மதிசேர் நூல்கள்,
மறைமலையாம் தமிழ்க்கடலின் மாண்பார் நூல்கள்
நறுமலர்கள், ஆங்கிலநூல், திங்கட் 'செல்வி'
நாட்காட்டி, நாட்குறிப்பு யாரால் பெற்றோம்?

திருக்குறளைப் பரப்புதற்குத் திருத்த மாகச்
சீரியபல் பதிப்புக்கள் கொண்டு வந்தார்
இருக்கையிலே தமிழ்த்தாயே எதிலும் எங்கும்
இருக்கைபெறப் பாடுபட்டு வெற்றி கண்டார்.
பெருக்கத்தும் சுருக்கத்தும் பிறழ்ந்தி டாமல்
பெருநெறியில் சைவந்தான் தழைக்கச் செய்தார்.
தருக்குடனே தமிழ்கெடுத்த பகைவர் தம்மைத்
தக்கவகை எதிர்த்தந்நாள் தமிழைக் காத்தார்.

---

* கழக மேனாள் ஆட்சியாளர் தாமரைச்செல்வர் வ. சுப்பையா பிள்ளை அவர்களின் இரண்டாமாண்டு நினைவு நாளில் (31—1—85) இயற்றியது.

அடிகளவர் சேர்த்துவைத்த அறிவுச் செல்வம்
அத்தனையும் கழகத்தின் ஆட்சிக் காக்கி
நெடியபுகழ் நூலகந்தான் நடத்திக் காத்து
நிலையாகக் கலைமன்றம் நிறுவிப் பேணித்
துடியாகச் செயல்பட்டுத் தொன்மை நூல்கள்
தூயதமிழ்ச் சான்றோரின் படங்கள், மடல்கள்
படியின்மிசை கிடைக்காத பலவும் சேர்த்துப்
பாரறியக் கண்காட்சி வைத்தார் யாரே!

ஆயிரமும் எழுநூறும் சேர்ந்த நூல்கள்
ஆய்ந்தாய்ந்து வெளியிட்ட அறிஞர் யாரே!
போயிரக்க வேண்டாமே புலவீர் வம்மின்
புதுநூல்கள் புத்துரைகள் புரிமின் என்று
தாயிரக்கம் கொண்டுதமிழ் காத்தார் யாரே!
தமிழ்ச்சைவம் உயிர்மூச்சாய்க் கொண்டார் யாரே!
பாயிரமாய்ப் பலர்போற்றப் பணிகள் செய்த
பண்பாளர் சுப்பய்யா அல்லால் யாரே!

அய்யாவும் கழகமும்தாம் தோன்றி யிந்த
அவனிமிசை பெருந்தொண்டு தமிழுக் கென்று
மெய்யாக ஆற்றியதை மேலோர் எல்லாம்
மேன்மையெனக் கொண்டாடி நன்றி சொல்வார்.
எய்யாத வாழ்வில்தமிழ் எழுச்சி காண
எடுத்தபணி ஒவ்வொன்றும் இனிமைத் தாகக்
கொய்யாத கனிபோலப் பயனை இன்றும்
கொடுத்திடுதல் உணர்ந்திடுவார் குவிப்பார் கைகள்.

அரசினரின் பெருந்துறைகள், பதிப்ப கங்கள்
அருமைப்பல் கலைக்கழகம் எல்லாம் சேர்ந்து
முரசறைந்தே இந்நாளில் முயன்று செய்யும்
மொழிவளர்ச்சிப் பணியனைத்தும் ஒருவ ராகப்
பரசுபுகழ்க் கழகத்தின் வழியே செய்து
பற்பலவாம் முதற்பணிகள் பதித்து வைத்தார்.
பிரசவம்போல் வேதனைகள் தாங்கித் தாமே
பெருந்திட்டம் செயலாக்கிப் பீடு சேர்த்தார்.

வரவெண்ணிப் பணியாற்றும் உலகில், மேன்மை
வண்டமிழும் சிவநெறியும் வளமே கொள்ள
இரவென்றும் பகலென்றும் எண்ணி டாமல்
எங்கெங்கும் எவரிடத்தும் சென்று சென்று

கரவொன்றும் இல்லாமல் கடமை செய்தார்;
　　கண்கவரும் பதிப்புநயம் காட்டிச் சென்ருர்.
அரவென்று வந்ததடை பலவும் தாண்டி
　　அற்புதமாய்த் தமிழ்வளர்த்தே அமர ராஞர்.

பரபரப்பாய் விலைபோகும் பார்வை நூல்கள்
　　பணமொன்றே குறிக்கோளாய்ப் பற்றித் தந்து
தரங்கெட்ட வணிகமுறை மலிந்த நாளில்
　　தகைசான்ற பழந்தமிழின் சுவடி யெல்லாம்
உரத்தோடு வெளியிட்டுத் தொண்டு செய்த
　　உயர்வொன்றே சுப்பய்யா உள்ளம் காட்டும்.
நிரந்தரமாய் அவர்பணிகள் தொடர்ந்து செய்து
　　நிலைத்தபுகழ்க் கழகத்தை நீடு காப்போம்.

குடும்பத்தார் சுற்றத்தார் என்பார் தம்மைக்
　　கொள்கைக்கு முன்ஞலே துரும்பாய் எண்ணி
உடும்பாகத் தமிழ்ச்சைவ உயர்வைப் பற்றி
　　உயிர்வாழ்ந்து பயன்பரப்பி இறுதி மூச்சு
விடும்வரையும் கழகத்தின் வாழ்வை உன்னி
　　வெற்றிபெறும் கருத்துரைகள் தந்து யர்ந்த
நெடும்புகழார் சுப்பய்யா நினைவைப் போற்றி
　　நெஞ்சுகந்த நன்றியொடு வணக்கம் சொல்வோம்.

குமரகுரு பரர்பெயரால் குழந்தைப் பள்ளி
　　கூறுசைவ சித்தாந்த தமிழ்ச் சங்கங்கள்
கமழும்பேர் சிவஞான முனிவர் நாகை
　　மறைமலையார் பெயர்களிலே நூலகங்கள்
அமர்நீலாம் பிகைபெயரில் அருமை யாக
　　ஆயபல கலைவிளக்கும் பயிற்சிப் பள்ளி
இமயம்போல் மறைமலையார் கலைமன் றந்தான்
　　இத்தனையும் சுப்பய்யா ஈகை யென்போம்.

ஆசிரியர் மாணவர்கள் அறிஞர் எல்லாம்
　　அருமைமிகு கழகநூல் வாங்க வேண்டும்
பேசிவரும் தமிழ்வளர்ச்சி பெருமை கொள்ளப்
　　பெருங்கழகப் பணியனைத்தும் வெற்றி காண
நேசித்தே அரசினரும் அமைச்சர் தாமும்
　　நெஞ்சார உதவிகளைச் செய்தல் வேண்டும்
வீசிவரும் கவர்ச்சியிலே அறிவு நூலை
　　வீழ்த்தாத வகைவேண்டிக் கழகம் காப்போம்.

———

# முப்பிறவியெடுத்த முதல்வரே வருக!

தமிழக முதல்வர் புரட்சித் தலைவர் டாக்டர். ம. கோ. இராமச் சந்திரன் அவர்கள் கடந்த நான்கு மாதங்களாகக் கடுமையான நோய் களினால் தாக்கப்பெற்றிருந்து, பின்னர் மருத்துவ உதவியால் நல முற்றது நம்மனைவர்க்கும் பெருமகிழ்ச்சியையும் பேராறுதலையும் தரும் செய்தியாகும்.

கடந்த அக்டோபர்த் திங்கள் 4ஆம் நாள் உடலில் உயிர் வளியின் ஓட்டக்குறைவால் நீலம் பாயப்பெற்ற நிலையில் உயிர்க் கிறுதி வருவதற்குச் சில மணித்துளிகளே உள்ள நிலையில் சென்னை அப்போலோ மருத்துவமனையில் தாமே நடந்து சென்று சேர்ந்து கொண்ட தமிழக முதல்வர் உடனடியாக மருத்துவம் பார்க்கப்பெற்று உயிர் காக்கப்பெற்றார். அடுத்து சிறுநீரகக் கோளாறும் மூளையில் குருதி உறைவுக் கட்டியும் ஏற்பட்டு உடலில் ஒருபக்க வாதநோயும் தாக்க பேரின்னல் உறும் நிலையை யடைந்து தம்மை மறந்த நிலையை அடைந்தார்.

உலகில் சிறந்த மருத்துவ அறிஞர்கள் அமெரிக்கா, சப்பான் நாடுகளிலிருந்து வரவழைக்கப் பெற்றனர். நாடுமுழுவதும் எல்லாத் தரப்பு மக்களும் முதல்வர் உடல்நலம் பெற எல்லாச் சமயக் கோயில் களிலும் சிறப்பு வழிபாடுகள் நாட்கணக்கில் செய்தனர். நாடெங்கும் திருக்கோயில்களுக்கு அன்பர்கள் கால்நடையாகச் சென்று வேண்டினர். கூட்டு வழிபாடுகள் நடைபெற்றன. இவற்றின் பலனாலும் சிறந்த மருத்துவத்தினாலும் ஓரளவு உடல் தேறிய முதல்வர் அமெரிக்க நாட்டிற்கு அழைத்துச் செல்லப்பட்டார். நியூ யார்க்கில் 'புரூக்ளின் டவுன் ஸ்டேட் மெடிகல் சென்டரில்' அவருக்கு மாற்றுச் சிறுநீரக அறுவை செய்யப்பெற்றது. மூளையில் ஏற்பட்டிருந்த குருதிக் கட்டி சுருங்கத் தொடங்கியதால் குருதி ஓட்டம் சரிப்பட்டு, செயலற்றிருந்த வலப்பக்க உடல் செயல்புரியத் தொடங்கியது. முன்போல் எழுந்து நடக்கவும் முடிந்தது. தெளி வாகப் பேசுவதற்குப் பேச்சுப் பயிற்சியளிக்கப்பெற்று வருகிறது. கூடிய விரைவில் அவர் தெளிவாகப் பேசுவார் என்று அமெரிக்க மருத்துவர்கள் கூறினர்.

தமிழக மக்கள் அனைவருமே அவர் உடல்நலம் பெற்றுத் தேறிய தற்காக மகிழ்ச்சி அடைந்துள்ளனர். அண்மையில் நடைபெற்ற பொதுத் தேர்தலில் மீண்டும் தமிழக ஆட்சியைக் கைப்பற்றியுள்ள முதல்வர் பிப்ரவரி 10ஆம் நாள் மீண்டும் தமிழகத்தில் புதிய அமைச்ச ரவையின் தலைமைப் பொறுப்பை ஏற்றுள்ளார். அவர்தம் தலைமையில் அமைந்துள்ள புதிய அரசு தொடர்ந்து தமிழ்மக்களுக்குத் தொண் டாற்றவும் தமிழக முதல்வர் விரைவில் முழுநலம் பெற்று முன்போல் திறமையாகச் செயல்புரியவும் வாழ்த்துகிறோம்,

அன்னையின் வயிற்றில் உதித்தபோது முதற் பிறவியும், கொடிய துப்பாக்கியின் குண்டுக்குத் தப்பியபோது இரண்டாவது பிறவியும் கடுமையான நோயினின்று மீண்டு மூன்ருவது பிறவியும் எடுத்துள்ள முதல்வரை 'முப்பிறவியெடுத்த முதல்வரே வருக வருக'என வாழ்த்துகிறோம்.

மாண்புமிகு முதல்வர் மீண்டு வந்தது மருத்துவ உலகுக்கே மாபெரும் வெற்றியாகும். ஆனல் மருத்துவர்கள் சில சமயங்களில் தயங்கியபோது—உயிர்வளி குறைந்தபோது உடனடியாக மருத்துவம் அளித்தாலும் அதை ஏற்றுக்கொண்டு நல்ல நிலைக்குத் திரும்பிய போது, பக்கவாதம் ஏற்பட்டு நினைவிழந்த நிலையை யடைந்தபோது; நாளுக்கு ஒரு முறை 'டையாலிசிஸ்' மருத்துவம் அளித்தபோது; மூளையில் ஏற்பட்ட கட்டியை அறுவை மருத்துவம் செய்து அகற்ற முடியாது தவித்தபோது; 67 அகவையில் மாற்றுச் சிறுநீரகம் பொருத்தியபோது—இந் நேரங்களிலெல்லாம் இவருக்கு இம் மருத்துவங்களை ஏற்றுக்கொள்ளக்கூடிய உடல் வலிமையும் உள்ள உரனும் இருக்குமா என்று ஐயுற்றபோது—மருத்துவர்கள் கை தளர்ந்த நிலையில் மக்களின் கூட்டு வழிபாடு அவர்களுக்குக் கை கொடுத்தது. 'வழிபாட்டால் பல செயல்கள் நிறைவேறுகின்றன' என்று மேனாட்டறிஞர் கூறியதுபோல் தமிழக மக்களின் 'பிரார்த்தனை'யும் வழிபாடுகளும் மாண்புமிகு முதல்வருக்குக் கை கொடுத்துதவின.

நாடாளும் நாயகர் நான்கு மாதங்கள் கடுமையான நோயினால் பாதிக்கப்பெற்றபோது தமிழக மக்கள் அனைவருமே தங்கள் தலைவர் நலமுற்று மீண்டும் நாடாள வருவார் என்று உறுதியாக நம்பினர். அவர்கள் நம்பிக்கை வீண்போகவில்லை. அமெரிக்க நாட்டிலிருந்து மீண்ட முதல்வரை வரவேற்கக்கூடிய பல நூறாயிரம் மக்கள் முதல்வரைக் கண்டு நீண்டநேரம் பெருத்த ஆரவாரம் செய்தனர். முதல்வரே அவர்களுடைய அலைகடலெனத் திரண்ட அன்பைக் கண்டு ஆனந்தக் கண்ணீர் சொரிந்தார். எல்லா நலமும் பெற்ற தங்கள் முதல்வர் மீண்டும் திருவாய் திறந்து 'இரத்தத்தின் இரத்த மான உடன்பிறப்புகளே' என்று கூறுகின்ற பொன்னான நாளுக்காகத் தமிழக மக்களே காத்துக்கொண்டிருக்கிறார்கள். அப் பொன்னான நன்னாள் விரைவில் வரும் என்பதில் யாதோர் ஐயமும் இல்லை. மருத்துவ உலகையே மலைக்கவைத்த மாண்புமிகு முதல்வர் இதனையும் செய்துகாட்டி உலகை வியப்பில் ஆழ்த்துவார்! வாழ்க முதல்வர்! அவர் நீடுழி வாழ இறையருள் கூட்டிவைக்குமாக.

———

# ஞாயிறும் தாமரையும்*

## [கழக இலக்கியச் செம்மல், புலவர் இரா. இளங்குமரன்]

ஞாயிற்றுக்கும் தாமரைக்கும் உள்ள தொடர்பு இயற்கைவழிப் பட்டது. ஆகலின் இலக்கிய வழிப்பட்டும் திகழ்கின்றது.

"தாமரைத் தடக்கை கூப்பித்
தாண்முதற் கிடந்த தம்பி
தாமரைத் தடத்தை ஒத்தான்;
தமையனும் பருதி ஒத்தான்;
தாமரைக் குணத்தி னுணை
மும்முறை தழுவிக் கொண்டு
தாமரைச் செங்க ணுனும்
தன்னுறு பரிவு தீர்ந்தான்"

என்னும் சிந்தாமணிப் பாட்டால் (1725) ஞாயிற்றுக்கும் தாமரைக்கும் உள்ள தொடர்பு நன்கு விளங்கும்.

கைகூப்பிக் கிடந்த தம்பி தாமரை போன்ருன்; அவன் முகம் முதலியவற்றை மலர்வித்த தமையன் ஞாயிற்றைப் போன்ருன். இவ்வுவமையால் ஞாயிற்றுக்கும் தாமரைக்கும் உள்ள இயற்கைத் தொடர்பு இனிதின் விளங்குதல் காண்க. பின்னூல்களில் இச் செய்தி மிக விரிவுபட்டு இயல்கின்றதாம்.

இங்கே நாம் கருதிக்கொண்ட ஞாயிறு, மொழி ஞாயிறு பாவாணர். தாமரை, தாமரைச் செல்வர் வ. சுப்பையா பிள்ளை. இவ் விருவர் கெழுமிய தொடர்பும் ஐம்பான் ஆண்டுகள் பின்னிப் பிணைந்து ஒருவர்க் கொருவர் பெருமை சேர்க்கும் வகையில் பிறங்கி நின்றமை, இருவர் தொடர்பையும் மேலோட்டமாக அறிந்தாராலும் உணரக் கூடியதாம்.

மன்னர்குடி பின்லே கல்லூரியில் பாவாணர் பணியாற்றிய காலமாகிய 1931இல், எழுதிய கடிதம் கிடைத்துள்ளது. 1—7—31 ஆம் நாளிட்ட கடிதம் அது. அக் கடிதத்தைப் பார்க்கும்

---

* ஞாயிற்றையும் தாமரையையும் ஒருங்கே நினைவுகூரும் கால வொருமையில், இக் கருத்தொருமை கண்டு மகிழுமாறு, பாவாணர் கடிதங்களிலிருந்து தொகுத்து வழங்கப்பட்டுள்ளது இது. 15—1—85 பாவாணர் நினைவு நாள். 24—1—85 தாமரையார் நினைவு நாள்.

போதே அதற்கு முன்னரே அவர்கள் தொடர்பு அழுத்தமாக இருந் தமை புலப்படுகின்றது. ''ஜூலை 4ம் வக்குள் செல்விக்குக் கட்டுரை ஒன்றனுப்புவேன். கழகத்திற்கும் எனக்கும் நெருக்கவினை ஏற்பட்டு விட்டது'' என்று அக் கடிதத்தில் குறிப்பிட்டுள்ளார் பாவாணர்.

அக் கடிதத்தில் குறித்த கட்டுரை 'மொழியாராய்ச்சி' என்பதாம். அது அத் திங்களிலேயே வெளிவருகின்றது. (சிலம்பு 9. பக் : 275) அடுத்த இதழில், ''வடமொழிச் சென்ற தென் சொற்கள்'' (9 : 295) தொடர்கின்றது. அவற்றைத் தொடக்கம், 55ஆம் சிலம்பில், ''தமிழனின் பிறந்தகம்'' என்னும் கட்டுரை காறும் இயல்கின்றது. உலகத் தமிழ் மாநாட்டு மலர்க்கு வரைந்த கட்டுரையே அது. அவர் இயற்கையெய்திய திங்களில் (1981 சனவரி) வெளிவந்தது தமிழனின் பிறந்தகம் !

ஓர் எழுத்தாளரும் பதிப்பாளரும் ஐம்பான் ஆண்டுகள் அணுக்க முடையவராகவும் ஆராப் பிணைப்புடையராகவும் இருப்பது அருமையே யன்றோ! இவர்கள் இருவரும் என்றும் இரண்டற ஒன்றியே இருந்தனரோ?

பாவாணர் இடை இடையே ஊடினார்! ஒதுங்கினார்! ஆனால், ஊடலை உவகையால் தழுவிக் கூடினார் தாமரையார்! ''ஒருவர் பொறை இருவர் நட்பு'' என்பதற்குச் சான்றானார் தாமரையார்.

ஒரு துறைக்கண் உயர்வற உயர்ந்தவரின் உணர்வு நிலையை அறிந்துகொள்வார், உலகில் அரியர்! அறியவல்லாரே பெரியர்! அப் பெரியாருள் பெரியாராய் விளங்கினார் தாமரைச் செல்வர்!

நன்றியுரை கூறும் முறையை அறிவிக்க விரும்புகிறார் பாவாணர் : ''திரு. வ. சு. பிள்ளை நிகழ்த்திய வரவேற்புரைகள் செந்தமிழ்ச் செல்வியில் பலவுள. அவற்றைப் பார்க்க. எழுதி மனப்பாடம் செய்க'' என்பது ஒரு கடிதக் குறிப்பு.

''முழு நம்பிக்கை வைத்த இடத்தில் நான் கணக்கைச் சரி பார்ப்பதில்லை. என் ஆராய்ச்சி மனமும் அத்தகைய பான்மைய தன்று'' என்று 5—11—36இல் பாவாணர் தாமரையார்க்கு வரைந்துள்ளார்.

22—2—'50இல் ' நம்மை இணைத்துக்கொண்டிருப்பது தனித் தமிழ்ப் பற்றே யன்றி, இந்தப் பற்று வரவுக் கணக்கன்று'' என்று மேலும் வரைந்துள்ளார். ஏனெனில் முன்னைக் கடிதத்திலேயே 'முழு நம்பிக்கை வைத்த இடம்' என்று முடிவு கொண்டுள்ளாரே!

பாவாணர், வ. சு. அவர்கள்மேல் வைத்திருந்த பற்றுமையை விளக்கும் உயர் சான்றுகளுள் ஒன்றைச் சுட்டி அமைவாம்.

பறம்புக்குடியில் உலகத்தமிழ்க் கழக முதன் மாநாடு நிகழ்ந்தது. அதில் பாவாணர் இயற்றிய திருக்குறள் தமிழ் மரபுரையை வெளியிடும் திட்டமும் இருந்தது. எவரைக் கொண்டு வெளியிடலாம் என்பதைப் பாவாணர் மாநாட்டுப் பொறுப்பாளர் பேரா. தமிழ்க் குடிமகனுர்க்கு வரைந்தார் :

''தாமரைத் திருச் சுப்பையாப் பிள்ளை அவர்களையே நிகழ்ச்சி நிரலில் குறித்துக்கொள்க. அவர் வராவிடினும் குற்றமில்லை. புலவரென்றிருப்போரெல்லாரும் ஒரு நிகரரல்லர். வரிசையறிதலே முதன்மையானது. திரு. வ. சுப்பையாப் பிள்ளை ௫0 ஆண்டுகளாகத் தமிழ்நூல் வெளியீட்டில் ஈடுபட்டவர். ௨000 நூல்கட்குமேல் வெளியிட்டுள்ளவர். என் திருக்குறள் தமிழ் மரபுரை இறுதிப் பத்துப் படிவங்களையும் தாமே முழுப் பொறுப்பேற்றுத் திருத்தி அச்சீட்டு வேலையை மேற்பார்த்து வருபவர். நூல் முழுமையிலுமுள்ள சிறப்புக் கூறுகளையெல்லாம் படித்தறிந்தவர். ஆதலால் அவரே வெளியீட்டுரை நிகழ்த்த மிகத் தகுதிவாய்ந்தவர். என்றும் என் கருத்துக்கு ஒத்தவர்''.

1968இல் எழுதிய கடிதம் இது! ''என்றும் என் கருத்துக்கு ஒத்தவர்'' என்னும் நான்கு சொற்களிலே உள்ள 'தெளிந்த உறுதிப்பாடு' எளிதில் வாய்ப்பதோ? அதனை வாய்க்கப் பெற்றார் தாமரையார்!

---

## தமிழ் மொழியில் மேலும் ஒரு காப்பியம்

இரட்டைக் காப்பியங்களான சிலப்பதிகாரம், மணிமேகலையின் இணைப்பாக இன்னுமொரு காப்பியம் தமிழில் தோன்றவேண்டும் என்னும் நோக்கத்தில் மதுரைத் தமிழ்ச்சுரங்கம் நடத்திய போட்டியில் வெற்றிமாலை சூடி வெளிவருகிறது 'மாதவமேகலை'.

இளமையில் துறவுபூண்ட மணிமேகலை தன் வாழ்வில் என்னென்ன நிகழ்ச்சிகளைச் சந்தித்திருக்கக்கூடும் என்னும் கற்பனையில் பிறந்தது இக் காப்பியம். சிலப்பதிகாரத்தைப் போல் மூன்று காண்டங்களையும், முப்பது காதைகளையும் கொண்டு 2500 அடிகளில் அமைந்துள்ளது இப் புதுக்காப்பியம்.

இருபதாம் நூற்றாண்டில் இறுதியில் புறப்பட்டுக் கொண்டிருக்கும் புதுக்கவிதை வெள்ளத்தை 'மாதவமேகலை' மரபுக்கவிதைகளின் மரக்கலமாக நீந்திக்கடக்கும். இக் கலத்தைச் செய்து செலுத்தும் மீகாமன் கவிஞர் 'மீனவன்' முகவை மாவட்ட கண்டரமாணிக்கத்துக்காரர். முறையாகத் தமிழ் கற்றுத் தமிழ் ஆசிரியராகப் பணியாற்றிவரும் இவர் பல பரிசுகளைப் பெற்றவர். இந்நூற்றாண்டில் இப் புதுக்காப்பியம் தமிழில் தோன்ற தமிழ்ப்பேராசிரியர் டாக்டர் ஆறு. அழகப்பன் அவர்கள் வழி வகுத்தார்கள்.

## எண்மர் எண்மணி மாலை

[மருத்துவர் மறையரசன்]

(முன் இதழ் கசுஎஆம் பக்கத் தொடர்ச்சி)

**7.1.** வீரமாமுனிவர் :

(வெண்பா)

பெயர்பொரு ளோடு தொகைதொடை யாக
உயர்முறை கோத்து நிறைவாம் —பெயலாய்
முதன்முத லாக சதுரக ராதி
நுதலினை நீக்கினை நோய்.

**7.2.** பரிதிமாற் கலைஞர் :

(அகவல்)

நோயும் முதலும் நாடித் தணிக்க
ஆயுங் கலையாம் இலக்கணங் கண்டு
நாடக மான விசயமுந் தந்தே
ஊடகம் நிறைபகை ஒழித்தொற் றுமையைத்
தேடுக என்றே பழைமைத் தமிழினைக்
கூடும் கொள்கை கொண்டவர் பிறப்பால்
மாறிப் பிறந்தது எம்முடை யிழப்பெனக்
கூறித் தொடர்ந்து குழைந்திடும் மறைமலை
அடிகள் வழியாய் அமைத்த
படிகள் ஏறும் பைந்தமிழ் நிலமே.

**7.3.** மறைமலையடிகள் :

(கட்டளைக் கலித்துறை)

நிலத்தா மரைப்பூ கொடிமுந் திரிப்பழம் நின்னெழுத்தால்
உலவா நிலையில் பிசுனத் தனமில் உயர்தமிழிற்
கலவாப் பிறமொழிச் சொற்கள் எனத்தேர் கனிப்பறித்து
புலவா றுனைப்புகழ்ந் தேற்றுவம் பைந்தமிழ்ப் பாசறையே!

**7.4. பாவேந்தர் :**

(வஞ்சி விருத்தம்)

தமிழ்ப்பாசறை தனிலோங்கிய
தமிழாவுன தெண்ணம்
அமிழ்மோஇனி பலவாறது
முழங்கும்தனி வண்ணச்
சிமிழுள்சிறி தளவேஉள
தெனவேநினை எண்ணம்
குமிழ்மேவிட குதித்தேபெருங்
கடலாவதும் திண்ணம்.

**7.5. பாவாணர் :**

(அறுசீர் ஆசிரிய விருத்தம்)

அம்மைத் தமிழே அன்றொருநாள்
ஆண்டா ளுலகை ; பிறமொழிகள்
வெம்மைக் கலப்பாய் விரைந்தூடி
வீழ்த்த வீழ்ந்தாள் ; விழித்தெழுந்தே.
செம்மைத் திறத்தால் வேர்ச்சொற்கள்
சிறக்க ஆய்ந்த பாவாணர்,
தம்மை மறந்து தாய்பணியைத்
தாங்கும் வளர்க அவளாட்சி.

**7.6. வ. சுப்பையா (பிள்ளை) :**

(மருட்பா)

ஆட்சிமொழி ஆனதமிழ் அன்றுமுதல் மாநாட்டை
மாட்சிமையாய் நீடத்த மாத்தமிழ்நூல்—காட்சியென்ன
எண்ணரும் பொத்தகம் ஏற்ற கருத்தொடு
மண்ணுல கேந்தி மயங்க
நண்ணிய ஐயனை நானிலம் மறக்குமோ ?

**7.7. பண்ணுய்வாளர் :**

(சிந்து)

மறந்திடல் கூடுமோ பண்ணும்—அந்தத்
திறமொடு பண்ணியம் உள்ளமே பின்னும்

திறத்திறம் எனநான்காய் காட்டி—நல்ல
திறமொடு தமிழிசை உரமெனக் கூட்டி
திரித்திடும் முறைப்பாலை என்னும்—ஆய
திரிகோண சதுரமும் வட்டமாய் எண்ணும்
அகம்புறம் எனநிலை இரண்டு—மேலும்
அருகியல் பெருகியல் என்றுகுல முண்டு
தகவான தோல்துளை நரம்பு—கஞ்சம்
தருமிட ரூடைந்து கருவிக்கு வரம்பு
நகலாகச் சிலம்பிசை மொண்டு—தந்தான்
நகைகொண்ட தமிழ்ப்பணியா மிகச்சிறு துண்டு ?

## 7.8. பாவல ரேறு :

(கலி வெண்பா)

சிறுதுண்டு நற்றுரும்பு ஏதுமொதுக் காமல்
பெறுகின்ற நல்லுள்ளம் என்றும் மறுப்பின்றி
உள்ளமெனும் பாவையில் எண்ணம் உயர்கருத்தும்
கள்ளமிலா நெஞ்சோடு கட்டிவைத்து—குள்ளமன
மக்களிடைச் சாதிவிற கேற்றியதில் மானத்தீ
வைக்கின்ற பாவலராம் வெந்துவரத்—தக்க
விழுப்பநெய் ஊற்றி விழித்தெழுங்கள் என்று
முழுப்பொங்கல் ஆக்கிவைக்கும் ஏறு—கொழுப்பேறி
ஒட்டாத சாதி உடைத்தெறியும் உள்ளமொடு
வெட்டாத நம்பகையை வெட்டுபவன்—முட்டமுட்ட
பாவேந்தன் நற்கருத்தைப் பாவணர் எண்ணத்தை
சாவேந்தி னுலும் நிறைவேற்றப்—பாவேந்தி
ஏறுநடை போடுகின்ற ஏந்தல், பழந்தமிழின்
தூறெடுத்து உள்ளபடி தீந்தமிழில் வேறுமொழி
கூட்டுப் பயிர்நடத்தக் கூடாது எனுமவனைக்
காட்டும் தனித்தமிழ்ப்பூங் கா.

# முதலையும் முதலையும்

[நக்கீரன் வழியடிமை. பி. மா. சோமசுந்தரனூர், இராணிப்பேட்டை.]

திருவாசகம் நீத்தல் விண்ணப்பம், 41ஆவது பாடல்,

"முதலைச்செவ் வாய்ச்சியர் வேட்கைவெந் நீரிற் கடிப்ப மூழ்கி
விதலைச்செய் வேனை விடுதிகண்டாய்......"

என்று தொடங்குகிறது. இதன் மெய்ப்பொருளாமாறு:

"செங்கிடைச்சி என்னும் பூண்டுபோன்ற சிவந்த வாயையுடைய பெண்கள்மேற் செல்லுங் காமமாகிய கொடிய பண்பில் விரைந்து மூழ்கி நடுக்கம் கொண்ட என்னைக் கைவிடேல்"

என்பதாகும். தவப்பெருந் திருவினராகிய பாம்பன் குமரகுருதாச அடிகளார் அருளிச்செய்த ஸ்ரீமத் குமாரசுவாமியத்துப் பழனிமலைத் திருவிளையாடலிலும்,

"முதலையிதழ் மலர்மகடன் மருகா
முதுவிபுதர் தொழவருளு மிலையயில்கொள் முருகா"

என்று முதலை என்ற சொல் செங்கிடைச்சி என்ற பொருளில் பயில்வதுணர்க. எனவே திருவாசகத்துறு பாடல் ஆற்றெழுக்காகப் பொருள்படுமாறமைந்துள்ளதும் விளங்கும். ஆயினும் இப் பாடலுக்கு உரை வகுத்த பெரியோர்,

"ஆசையாகிய வெப்பமுடைய நீர்நிலையில் சிவந்த வாயினையுடைய மாதராகிய முதலைகள் கடிக்கும்படியாக முழுகித் துன்பப்படுவேனைக் கைவிட்டிடாதே"

என்றே பிழைபடும் உரை கூறிச் சென்றனர். பெண்களை முதலைகள் என்னில் ஆண்களை என்னென்று கூறுவது? இரக்கமே உருவாய திருவாதவூரடிகள் இத்துணைக் கொடுஞ் சொல்லையிட்டுப் பெண்களை இகழ்வாரா? முதலை என்ற சொல்லுக்குச் செங்கிடைச்சி என்ற பொருளுண்மையும் அப்பூண்டின் திறமும் அறியாமையே பிழையுரை தோன்றக் காரணமாயது. பிருங்கி மாநகரம் இராமசாமி முதலியார் 1897இல் வெளியிட்ட பழைய உரையும், பட்டாளம் வாசுதேவ முதலியார் 1897இல் எழுதிய உரையும், சைவசித்தாந்த மகாசமாசம் வெளியிட்ட (கா. சு. பிள்ளையவர்கள்) உரையும், இவர்களைப் பின்பற்றிப் பின் வெளிவந்த உரைகளும், செவ்வாய்ச்சியர் முதலை என்று சொல்லை மாற்றியிட்டுப் பிழையுடன் காணப்படுகின்றன.

தமிழர் பிறமொழிச் சொற்களை ஏற்பதில் காட்டும் ஆர்வம் தாய்மொழிச் சொற்களைப் பேணுவதில் காட்டுவதில்லை என்பதற்கு 'முதலை' ஒரு நல்ல எடுத்துக்காட்டேயாம். சென்னைப் பல்கலைக் கழகம் வெளியிட்ட 'லெக்சிகன்' செங்கிடைச்சியின் திறம் கூறாமலே செல்லலும், முதலை என்ற சொல்லை விளக்காமலே செல்லலும் தமிழர் தம்மொழிச் சொற்களின் பொருளைச் சிறிது சிறிதாக மறந்து வருகின்றனர் என்று காட்டும்.

தமிழ்மறை பேணும் திருவுடைத் தமிழர், முதலைச் செவ்வாய்ச்சியர் என்பது செங்கிடைச்சி ஒத்த சிவந்த வாயுடைய பெண்கள் என்று பொருள் என அறிதல் வேண்டும். செவ்வாய்ச்சியராகிய முதலை என்று பொருள்படாது என்னும் நன்னெறி கடைப்பிடித்து வாழ்வாராக.

---

## இற்றை நாள் தமிழன்

[க. சி. கமலையா]

கைகட்டி வாய்புதைக்கும் தமிழா—உனக்குக்
காலாலெட்டி உதைப்பவர் தெய்வம். 1

தமிழைப் பழிப்பவர் உன் தாய்—தமிழா
தாவிச் சென்றணைவாய் நீயவர் சேய். 2

கூனிக்குறுகி நிற்பாய் தமிழா—அதனைக்
கோலோச்சும் நிலையெனப் புகல்வாய். 3

நெல்லிக்காய் மூட்டைநீ தமிழா—அந்தோ
நெளிந்து கிடக்கும்நீ மரக்கட்டை. 4

ஏழைநீ கோழையும்நீ தமிழா—அனைவர்
ஏச்சும் இழிபேச்சும் உனக்கணியாம். 5

தமிழனென்றோர் இனமில்லை யென்பாய்—ஐயோ
தனிக்குணம் அவனுக் கேதென்பாய் தமிழா. 6

எங்கு செத்தால் தமிழர் எனக்கென்ன—என்பாய்
ஏங்கி நிற்பாய் தமிழா எலும்பைநீ நாடி. 7

பண்டைத் தமிழன் பார்புகழ நின்றான்—இன்று
சுண்டெலி யென நீ நிற்கின்றாய் தமிழா. 8

# முதுதமிழ்ப் பேரறிஞர்
# மே. வீ. வேணுகோபாலப் பிள்ளை மறைவு

முதுபெரும் புலவரும், தமிழ் அறிஞரும், புரசை சுந்தரர் தமிழ்க் கல்லூரித் தலைவரும், இலக்கணத் தாத்தா, சிந்தாமணிச் செல்வர் என்றெல்லாம் புகழப்பெற்ற வருமான மகாவித்துவான் மே. வீ. வேணுகோபாலப்பிள்ளை அவர்கள் 4—2—85 காலை, தமது 89ஆம் அகவையில் சென்னைப் புரசையில் உள்ள அவரது இல்லத்தில் காலமானார்கள் என்ற செய்தியறிந்து ஆற்றொணாத் துயரெய்துகிறோம்.



புலவரவர்கள் சென்னை முத்தியால் பேட்டை உயர்நிலைப்பள்ளி, புரசை லுத்தரன்மிசன் உயர்நிலைப்பள்ளி ஆகியவற்றில் பணியாற்றி ஓய்வு பெற்றவர். தமிழாசிரியப் பணியைவிட நாட்டில் நல்ல தமிழ் நடமாட, பிழையில்லா நூல்கள் வெளிவர ஆற்றிய பதிப்பாசிரியப் பணிகள் மிகப் பெரியவை. முத்தமிழ்க் காவலரவர்கள் தலைமையில் இயங்கிவரும் புலவர் குழுவில் பல்லாண்டுகள் உறுப்பினராக இருந்தார். இலக்கணத்தில் நிரம்பிய புலமைபெற்ற இவர் பவாநந்தர் கழகவழிவந்த இலக்கண நூல்கள் பலவற்றைத் திருந்திய பதிப்பாக வெளிவரச்செய்தமை குறிப்பிடத்தக்கது. கட்டுரைகள், கவிதைகள் புனைவதிலும், இலக்கண இலக்கியச் சொற்பொழிவுகளை நல்ல முறையில் ஆற்றுவதிலும் வல்லவர். இலக்கண இலக்கியங்களை மாணவர் உள்ளத்தில் பதியும் வகையில் கற்பிக்கும் பேராற்றல் மிக்க ஆசிரியராகத் திகழ்ந்தார்.

மேலும் சிறந்த பண்பாளராகவும், தமக்குச் சரியெனப்பட்டதைத் துணிவுடன் உரைக்கும் இக்கால நக்கீரராகவும் திகழ்ந்தார். செய்வன திருந்தச் செய்தலும், திருத்தமாக எழுதுதலும், அமைதியாகப் பேசுதலும், உணர்ச்சி வயப்படாத உயர்பண்பும் இவர்க்கேயுரிய தனிச் சிறப்புகள் எனில் மிகையன்று. இவர் வரலாறு பின்னர் வெளிவரும்.

இத்தகைய தமிழ்ப் பெரியாரை இழந்து வருந்தும் இவர்தம் குடும்பத்தார்க்கும், மாணாக்கர்கட்கும் எமது ஆழ்ந்த இரங்கலைத் தெரிவித்துக்கொள்கிறோம்.

———

# சால்புமிகு சாம்பமூர்த்தி சிவாச்சாரியாரின் மணிவிழா

தமிழ்நாட்டுத் திருக்கோயில்களில் இறைபணியாற்றுவதற் கென்றே தோன்றியவர்கள் சிவாச்சாரியப் பெருமக்கள். இவர்கள் இறைவனை முப்போதும் தீண்டி திருமுழுக்காட்டி, மலரிட்டு வழி பட்டு இறையடிகள், மேன்மக்கள் ஆகியோரின் நலனுக்காகப் பாடு பட்டோராவர். இத்தகைய சிவாச்சாரியர்கள் குலதிலகமாக விளங் குபவர், சென்னை, முத்தியாலுப்பேட்டை, தம்பு செட்டித்தெரு விலுள்ள காளிகாம்பாள் திருக்கோயிலில் திருத்தொண்டு ஆற்றி வரும் சால்புமிகு வி. சாம்பமூர்த்தி சிவாச்சாரியார் ஆவர்.

இக் காளிகாம்பாள் திருக்கோயில் மராட்டிய மாமன்னன் வீர சிவாஜி வழிபட்ட திருக்கோயில் என்பர். பாட்டுக்கொரு புலவனு கத் திகழ்ந்த பாரதியார் ''யாதுமாகி நின்றாய் காளீ'' என்று பாடிய திருத்தலம் இது. பாரதியார் பாடல் பெற்ற தலமாகத் திகழும் இத் திருக்கோயிலில் இளமை முதல் தம் தந்தையாரின் வழிநின்று திருத் தொண்டாற்றி வருபவர் சாம்பமூர்த்தி சிவாச்சாரியார்.

ஆகமங்களையும் வேதங்களையும் இளமையில் முறையாகப் பயின் றவர். தம் தந்தையாரின் தூண்டுதலால் கழகப் புலவராகத் திகழ்ந்த ப. இராமநாதபிள்ளை அவர்களிடமும் திருக்குறள் பீடம் அழகரடி களாரிடமும் முறையாகச் சைவசித்தாந்தப் பாடம் கேட்டவர்.

கோயில்களில் வடமொழியிலேயே வழிபாடு நடைபெறுவதால் கூடியமட்டிலும் கோயில்களுக்குச் செல்வதைத் தவிர்த்த கழக மேனாள் ஆட்சியாளர் தாமரைச் செல்வர் வ. சுப்பையா பிள்ளை அவர்கள், வாய்ப்புக்கிட்டிய போது தமிழ்ப்பற்றுடைய சாம்பமூர்த்தி சிவாச்சாரியாருக்காக இவர்தம் கோயிலுக்குச் செல்வதுண்டு. இரு வரும் ஒருவரையொருவர் நன்கு மதித்து வந்தனர்.

ஆன்றவிந்தடங்கிய சான்றோராகத் திகழும் இவர் 'பணியுமாம் என்றும் பெருமை' என்பதற்கோர் இலக்கணமாகத் திகழ்பவர். திருக்கோயிலுக்கு வரும் அனைவரிடமும், பெரியோர் முதல் சிறியோர் வரை எல்லோரிடமும் அன்பாகவும் பண்பாகவும் பழகும் இவரை வயது வேறுபாடின்றி அனைவரும் இவர்தம் திருவடிகளில் விழுந்து வணங்குவதை வேறு எந்தத் திருக்கோயிலிலும் காணாத வகையில் இங்கே எப்போதும் காணலாம். அதனையும் பண்போடு ஏற்று 'எல்லாம் அம்பாளுக்குச் சேரட்டும்' என்று அடக்கத்துடன் உடல் கூனிக் குறுகி ஏற்றுக்கொள்ளும் அவர் பாங்கு கண்டு மகிழத்தக்கது. பண்பின் உறைவிடமாகத் திகழும் இவர்தம் பெருமை இன்று உலக முழுவதும் பரவியுள்ளது.

கீழைநாடுகள் முதல் மேலைநாடுகள்வரை பல்வேறு நாடுகட்குச் சென்று பல்வேறு கோயில்களில் குடமுழுக்குகள் நடத்திய பெருமை

இவருக்கு உண்டு. சென்றவிடமெல்லாம் சிறப்பைச் சேர்த்துக் கொள்ளும் கற்ருேராகிய இவருக்குப் பலநாடுகளிலும் நண்பர்கள் உளர்.

வெளிநாடுகள் மட்டுமன்றி உள் நாட்டிலும் அமைச்சர்கள் முதல் பெரும் அதிகாரிகள் வரை இவரைப் பெரிதும் போற்றி மகிழுகின்றனர். இவர்தம் வழிபாட்டு முறையைக் காணவும் இவர்வழி அன்னையின் அருளாசியைப் பெறவும் திரளான மக்கள் இத் திருக் கோயிலுக்கு வருவதுண்டு.

இறைவியினுடைய திருப்பெயர்களை ஒவ்வொன்ருக எழுத்துத் திருத்தமாக கணீரென ஒலிக்கும் இவர்தம் குரல்வளம் இறைவியுடன் நம் சிந்தனையை இரண்டறக் கலக்கச் செய்யும் வகையில் அமையும். கம்பீரமான இவர் குரலொலி திருக்கோயிலினுள் இறைவியின் அருளை முழுதும் பெருக்கமெடுத்து நிற்கச் செய்யும். உருகாத உள்ளத்தையும் உருக்கச்செய்யும் பான்மையது. மனமொன்றிய நிலையில் இவர் செய்யும் குங்கும அர்ச்சனை உள்ளத்தை உருக்கி உடலைச் சிலிர்க்க வைக்கக் கூடியதாகும்.

இத்தகைய சான்ருேரின் மணிவிழா பிப்ரவரி 7, 8 ஆகிய இரு நாட்களில் சென்னையில் தர்மபிரகாஷ் மண்டபத்திலும் கலைவாணர் அரங்கத்திலும் சிறப்பாக நடைபெற்றது. இதில் அமைச்சர் பெருமக்களும் சமயச் சான்ருேர்களும் இறையடியார்களும் பெருந்திரளாகக் கலந்துகொண்டனர்.

———

## *புத்தாண்டுப் பூட்கை!

[பேராசிரியர் தமிழன்பன், எம். ஏ., எம். ஃபில்

அரசினர் கலைக் கல்லூரி, விழுப்புரம்.]

சிவயோகம் வேண்டுமிறை யடியவர்க்கு
சித்தாந்த சுவையமுதைப் படைக்கவூர்
நவிலுமொரு பதிப்பகமே கண்டதமிழ்
நாடேத்தும் ''சுப்பையா பிள்ளை''மேலோன்
தவஞ்செய்து பெற்றமகள்; மாதிகை''செந்
தமிழ்ச் செல்வி'' கழகவழி இடரின்றி
புவனமிதில் நிலவும்வகை செய்யதமிழ்ப்
புத்தாண்டில் பூட்கையாக் கொண்டிடுவோம்!

---

* சுறவ(தை)த் திங்களே தமிழ்ப் புத்தாண்டு எனக்கொண்டு எழுதியது.

# தொல்காப்பியத்தில் மரஞ்செடிகொடிப் பெயர்கள்

[பி. எல். சாமி, இ. ஆ. ப. (ஓய்வு)]

(முன் இதழ் உ0கூஆம் பக்கத் தொடர்ச்சி)

ஆவிரை எல்லோருக்கும் தெரிந்த செடியாகும். ஆவாரம் என்று வழங்கப்படும். வறட்சியான நிலத்திலும் இச் செடி கூறப்பட்டுள்ளது. ஆவிரைப் பூ மாலையைக் காதல் நிறைவேருத தலைவன் அணிந்து மடல் ஏறுவான் என்று கூறப்பட்டுள்ளது. ஆவிரையின் பூ பொன்னிறமாக இருக்கும். இதை அறிவியலில் Cassia Auriculata என்றழைப்பர்.

**ஆண் :**

"ஆண்மரக் கிளவி அரைமர இயற்றே"

என்று 305ஆம் சூத்திரத்தில் ஆண்மரம் பற்றிக் கூறப்பட்டுள்ளது. இந்தச் சொல் தொல்காப்பியத்தில் மட்டுமே சொல்லப்பட்டுள்ளது. வேறு எந்தத் தமிழிலக்கியப் பாடல்களிலும் கூறப்படவில்லை. ஆனுல் திவாகர நிகண்டு இதற்கு சே, எகின் என்று பொருள் கூறியுள்ளது. சே என்பதால் இஃது அழிஞ்சில் என்பதைக் குறிக்கலாம். அகக் காழுடைய மரத்தை ஆண் என்றும் புறக்காழுடைய மரத்தைப் புல் எனவும் தொல்காப்பியம் கூறியுள்ளது. அழிஞ்சில் மரத்தின் வைரம் பாய்ந்த நடுப்பகுதி உறுதியாகவும் காழுடையதாகவும் இருந்ததால் ஆண் என்று அழைக்கப்பட்டிருக்கலாம். அதற்கு எதிர்மாருகப் பெண்ணை என்ற சொல் பனை மரத்தைக் குறித்தது. பெண் என்ற மூலச் சொல்லிலிருந்து பெண்ணை தோன்றியிருக்க வேண்டும். ஆண் என்ற மரம் அறிவியற்படி Alangium Salvifolium ஆகவே இருக்கலாம்.

**எள் :**

சூத்திரம் 309 எள்ளைப்பற்றிக் குறிப்பிட்டுள்ளது. இது யாவருக்கும் தெரிந்த செடியானதால் விளக்கம் தேவையில்லை. இதை அறிவியலில் Sesamum Indicum என்றழைப்பர்.

**இல்லம் :**

"இல்ல மரப்பெயர் விசைமர வியற்றே"

என்று 314ஆம் சூத்திரத்தில் இல்லம் என்ெருரு மரத்தைப்பற்றிக் கூறப்பட்டுள்ளது. இதை இக்காலத்தில் தேற்ரு என்றழைக் கின்றனர். சங்க நூல்களில் மனை மரம் என்று குறுந்தொகை (19) பரிபாடல் (11—19) ஆகியவை இல்ல மரத்தை அழைத்திருக் கின்றன. சங்க நூல்களில் கலித்தொகையிலும் (142) மற்றும் மணிமேகலையிலும் (23 : 142) இல்ல மரத்தில் நசுக்கப்பட்ட விதை கலங்கிய நீரின் அழுக்குகளைக் கீழே ஈர்த்துத் தூய்மையாக்கும் என்று கூறப்பட்டுள்ளது. தேற்ரு என்ற பெயரே இப் பொருளில் தான் இப்பொழுது வழங்குகின்றது. சங்க காலத்தில் இந்த மரம் வீடுகளிலும் மனைகளிலும் வளர்க்கப்பட்டதாகத் தெரிகின்றது. தேற் ருவின் கொட்டையைக் கேரளத்தில் மகப்பேறுக்கு மருந்தாகப் பயன் படுத்தினர். இதை ஆங்கிலத்தில் Clearing Nut tree என்றழைப் பர். இதை அறிவியலில். Strychnos Potatorum என்றழைப்பர்.

எகின் :

"எகின்மர மாயின் ஆண்மர இயற்றே"

என்று 337ஆம் சூத்திரத்தில் எகின் என்ற மரத்தைப்பற்றிக் கூறப் பட்டுள்ளது. இந்த மரம் தமிழிலக்கியத்தில் எங்கும் வழங்கவில்லை. ஆனல் திவாகரம் சூடாமணி நிகண்டுகள் இதைப் புளியமரம் என்றும் புளிப்புச் சுவையுடைய மாமரம் என்றும் கூறியுள்ளன. எஃகு போன்ற மரத்தை உடையதால் எகின் என்ற பெயர் வந்திருக்கலாம். புளிய மரத்தின் அடிமரம் மிகவும் உறுதியானது. அதனல்தான் புளிய மரத்தைச் செக்கு, நெல் முதலியவற்றை அரைக்கும் அறவைக் கருவிகள் எல்லாம் செய்வதற்குப் பயன்படுத்தினர்.

ஆர் :

"ஆரும் வெதிருஞ் சாரும் பீரும்
மெல்லெழுத்து மிகுதல் மெய்பெறத் தோன்றும்"

என்று 364ஆம் சூத்திரத்தில் ஆர், வெதிர், சார், பீர் ஆகிய் மரங்களைப்பற்றிக் கூறப்பட்டுள்ளது. ஆர் என்பது இக்காலத்தில் மந்தாரை, ஆத்தி என்றழைக்கப்படும் மரமாகும். வறட்சியான காடுகளிலும் காணப்படும் இந்த மரங்கள் நிறைய இருந்ததால் ஆர்க்காடு என்ற பெயர் தோன்றிற்று. இதன் இலை இரு பிரிவாக உள்ளதைச் சங்க நூல்கள் 'கவையிலை ஆர்' (அகம் 104) என்று கூறியுள்ளன. காடுகளில் ஆர் மரத்தை இதன் இலையை வைத்தே கண்டுகொள்வர். இதனுடைய உட்பட்டை ஒருவகை நாரைத் தருகின்றது. இந்த நாரை பூக்களைத் தொடுக்கப் பயன்படுத்திய தாகச் சங்க நூலில் கூறப்பட்டுள்ளது. இதை இருவாட்சி என்றும்

சிலவிடங்களில் அழைப்பர். இதை அறிவியலில் Bauhinia Racemosa என்றழைப்பர்.

**வெதிர் :**

வெதிர் என்பது ஒருவகை மூங்கிலாகும். வெதிர் என்ற பெயர் தற்காலத்தில் தமிழில் பேச்சு வழக்கில் வழங்காவிட்டாலும் தெலுங்கிலும் கன்னடத்திலும் வழங்குவதால் இஃது எந்த வகை மூங்கில் என்பது கண்டுகொள்ள முடிகின்றது. மூங்கில்களில் பல வகைகள் உள்ளன. அவற்றுள் வெதிர் என்பதை அறிவியலில் Bambusa arundinacea என்றழைப்பர்.

**சார் :**

"சாரென் கிளவி காழ்வயின் வலிக்கும்"

என்று 365ஆம் சூத்திரத்தில் சார் என்ற மரத்தைப்பற்றிக் கூறப் பட்டுள்ளது. இந்த மரத்தைக் கண்டுபிடிப்பது கடினமாக இருந்தது. ஏனென்றுல் சங்க நூல்களிலும் இந்த மரத்தைப்பற்றிய குறிப்பு ஏது மில்லை. நிகண்டுகளிலும் பிற்கால நூல்களிலும் இந்த மரம் கூறப் படவில்லை. 365வது சூத்திரம் சார்க்காழ் என்று அழைத்துள்ளது. நுண்ணிதின் ஆராய்ந்து பார்த்தால் இது சாரைப் பருப்பு என்று இக்காலத்தில் பேச்சு வழக்கில் வரும் மரத்தின் பெயராகும். தெலுங்கு மொழியில் சாரப்பப்பு என்றழைக்கப்பட்டுள்ளது. தமிழ் நாட்டில் காட்டு மாங்கொட்டை என்றும் வழங்குவர். இந்த மரம் மாமரக் குடும்பத்தைச் சேர்ந்ததால் காட்டு மாங்கொட்டை என்றழைக் கப்பட்டது. இதன் பருப்பு பாதாம் பருப்புப்போல் சுவையுடையது. ஆகையால் இனிப்புப் பண்டங்கள் செய்வதில் பயன்படுத்தப்படு கின்றது. இதை அறிவியலில் Buchanania augustifolia என்றழைப்பர்.

**பீர் :**

"பீரென் கிளவி அம்மொடுஞ் சிவணும்"

என்று 366ஆம் சூத்திரத்தில் பீர் என்ற மரத்தைப்பற்றிக் கூறப் பட்டுள்ளது. இது யாவருக்கும் தெரிந்த பீர்க்கங் கொடியாகும். இதன் பூ மஞ்சள் நிறம் உடையது. தலைவனை நினைத்து வாடும் தலைவியின் பசலை நிறத்திற்கு ஒப்பிடப்பட்டுள்ளது. சில உரை யாசிரியர்கள் இதை ஒரு மரமாகக் கொண்டனர். இது தவறுகும். இது பீர்க்கங் கொடியேயாகும். அறிவியலில் Luffa acutangula என்றழைப்பர்.

**பூல் :**

"பூல்வே லென்று ஆலென் கிளவியொடு
ஆமுப் பெயர்க்கும் அம்மிடை வருமே"

என்று சூத்திரம் 376இல் பூல், வேல், ஆல் என்ற மரங்கள் கூறப்பட்டுள்ளன. பூல் எதுவென்பதை அறியச் சங்க நூல்களில் யாதொரு குறிப்புமில்லை. ஆனால் இது நாட்டுப்புற மக்களிடம் இன்றும் வழங்கும் செடியாகும். இஃது ஒரு புதர் போன்ற செடி. இதன் பழங்கள் சுவையுடையன ஆதலால் அதனை அவர் உண்பர். இதைப் புல்லாஞ்சி என்றும் அழைப்பர். 'புல்லாஞ்சி செடியில் புலி வந்து பூருது' என்ற வழக்கு உள்ளது. இதைக் கருநெல்லி என்றும் அழைப்பர். இதை அறிவியலில் Phyllanthus reticulata என்றழைத்தனர்.

**வேல் :**

இந்த மரம் எல்லாருக்கும் தெரிந்த தொன்றாகும். இதன் வைரம் பாய்ந்த மரத்தையும் உலர் கனியையும் சிறிய இலைகளையும் சங்க நூல்களில் வருணித்துள்ளனர். இந்த மரத்தை Acacia Arabica என்று அறிவியலில் அழைப்பர்.

**ஆல் :**

ஆல் என்ற மரம் யாவருக்கும் தெரிந்ததேயாகும். சங்க இலக்கியங்களில் பல பாடல்களில் கூறப்பட்டுள்ளது. தொல்ஆல், கடவுள் ஆல் என்றெல்லாம் கூறுவதுண்டு. இதன் பூ வெளிப்படையாகத் தெரியாததால் கோளி என்றழைப்பர். எல்லாத் திராவிட மொழிகளிலும் ஆலென்றே வழங்குகின்றது. மலையாளத்தில் பேரியால் என்றழைப்பர். ஆலமரத்தை Ficus bengalensis என்றழைப்பர்.

**குமிழ் :**

"குமிழென் கிளவி மரப்பெய ராயின்
பீரென் கிளவியொ டோரியற் றாகும்"

என்று 389ஆம் சூத்திரத்தில் குமிழ் என்பதைப்பற்றிக் கூறப்பட்டுள்ளது. இதை இன்றும் குமிழம் என்று நாட்டுப்புறங்களில் அழைக்கின்றனர். இதன் பூ மகளிரின் மூக்குப்போல இருப்பதாக உவமிக்கப்படுவதுண்டு. நேரில் பார்த்தால் இதன் பொருத்தம் புரியும். இதன் உருண்டையான பழம் மகளிர் காதில் அணியும் அணிக்கு ஒப்பிடப்பட்டுள்ளது. இதை Torch tree என்று ஆங்கி

லத்தில் அழைப்பர். இதன் கிளையைக் கொள்ளியாகப் பயன்படுத்துவ தால் இப் பெயர் வந்தது. இதை அறிவியலில் Gemelena arborea என்றழைப்பர். 394ஆவது சூத்திரம் தாமரை, வெள்ளம் ஆம்பல் ஆகியவைகளைக் கூறுகின்றன. தாமரை யாவருக்கும் தெரிந்ததே. அறிவியலில் Nelumbium speciosum என்றழைப்பர். வெள்ளம் ஒரு செடியோ மரமோ அன்று. ஆம்பல் அல்லியைக் குறிக்கும். இதுவும் யாவருக்கும் தெரிந்த நீர்வாழ் செடியே. இதை Nymphaea lotus என்றழைப்பர்.

தொல்காப்பியத்தில் எழுத்ததிகாரத்தில் கூறப்பட்டுள்ள மரஞ் செடிகள் இவைகளே. திணைகளைக் குறிக்கும் மரஞ்செடி கொடிப் பெயர்கள் திணைக்குரியதால் இங்கு எடுத்துக் கூறவில்லை. தொல் காப்பியத்தில் கூறப்பட்டுள்ள பெயர்களில் பல ஓரெழுத்து அல்லது ஈரெழுத்து மொழிகளாக இருப்பதைக் காணலாம். மற்றும் தொல் காப்பியத்தில் கூறப்பட்டவைகளெல்லாம் ஏதாவது ஒரு பயனைத் தந்தமை என்பதும் தெரிய வருகின்றது. குறிஞ்சிப்பாட்டைப் போல் தமிழ்நாட்டில் இருந்த செடி கொடி மரங்களைத் தொகுத்துக் கூறுவது தொல்காப்பியர் நோக்கமன்று. இலக்கணத் தொடர்பாக வந்தவைகளையே அவர் கூறியுள்ளார்.

## BIBLIOGRAPHY

### (துணை நூல்கள்)

ENGLISH

ACHART, A. D., Quinze cents plantes dans 1' Inde.

BLATTER, E., and MILLARD, W. S., Some Beautiful Indian Trees, J-Bale & Co., London, 1937.

BOR, N. L. Manual of Forest Botany, Oxford University Press, Bombay, 1953.

BOR, N. L. and RAIZADA, M. B., Some Beautiful Indian Climbers and Shrubs, Bombay Natural History Society, 1954.

BRANDIS, D., Indian Trees, Constable, London, 1906.

COWEN, D. V., Flowering Trees and Shrubs in India, Thacker, Bombay, 1950.

GAMBLE, J. S., Flora of the Presidency of Madras, 11 Pt., Calcutta and London, 1915-36.

GUPTA, R. K. and Marlange, M., Le Jardin Betanique de Pondichery, Institute Francais, Pondichery, 1961.

HOOKER, Sir JOSEPH D., Flora of British India, 7 Vols. London, 1872-97.

LEGRIS, P., La Vegetation de l'Inde ecologic et flore, Institute francais, Pondichery, 1963.

MAACCANN, C. Trees of India.

RANDHAWA, M. S., Flowering Trees of India.

SUBRAMANYAN, K., Aquatic Angiosperms, Council of Sci. and Indust. Research, New Delhi, 1962.

TROUP, R. S. The Silviculture of Indian Trees, Clarendon Press, Oxford, 1921.

University of Madras Tamil Lexicon, 1924—39.

தமிழ் :

ஐங்குறுநூறு, அகநானூறு, சிலப்பதிகாரம், சூடாமணி நிகண்டு, கலித்தொகை, நற்றிணை, பெருங்கதை, புறநானூறு, திணை மாலை நூற்றைம்பது, திவாகர நிகண்டு, தொல்காப்பியம், எழுத்ததிகாரம்—நச்சினார்க்கினியர், இளம்பூரணர் உரைகள், தொல்காப்பியம், பொருளதிகாரம்—பேராசிரியர், இளம் பூரணர் உரைகள்.

———

### ஓர் ஆண்டுக்கு நாம் எத்தனை பக்கம் படிக்கிறோம்?

நல்ல படிப்பாளி ஒருவன் ஆண்டுக்கு 2000 பக்கங்கள் படிப்பவனாக இருக்கிறான் என்று யுனெஸ்கோ அளவீடு ஒன்று அறிவிக்கிறது. ஆனால் இந்தியாவில் சராசரியாக ஒரு படிப்பாளி படிக்கும் மொத்தப் பக்கங்கள், ஆண்டுக்கு 32 தான்! இதிலும், 16 பக்கங்கள் பாடப்புத்தகங்கள் என்று ஒரு கணக்கெடுப்பு தெரியப்படுத்துகிறது. தற்போது இது 160 பக்கங்களுக்கு உயர்ந்திருக்கலாம் எனக் கணிக்கப்படுகிறது.

நன்றி : அறிவியல் பண்ணை, தமிழ்ப் பல்கலைக்கழகம்.

# ஆதீனங்கள் வளர்த்த அருந்தமிழ்

[புலவர் மு. சிவச்சந்திரன், எம். ஏ., பி. எட்.,
துணைப் பேராசிரியர்,
தருமையாதீனப் பல்கலைக் கல்லூரி, தருமபுரம்.]

(பரல்-உ, எரு ஆம் பக்கத் தொடர்ச்சி)

தருமை ஆதீன குருபரம்பரையில் நான்காவது குருமூர்த்திகளாய் எழுந்தருளியிருந்த ஸ்ரீமாசிலாமணி தேசிக சுவாமிகள், செந்திலாண்டவன் திருவருள் பெற்ற ஸ்ரீகுமர குருபரசுவாமிகளுக்கு ஞானாசிரியராய் விளங்கியவர்கள் ஆவார்கள். குமரகுருபரசுவாமிகள் தம் ஞானாசிரியர் மாசிலாமணி தேசிக சுவாமிகள் மீது ''பண்டார மும்மணிக் கோவை'' என்னும் நூலொன்றைப் பாடியருளினார். இதனாலேயே குமரகுருபரரால் தோற்றுவிக்கப் பெற்ற 'ஸ்ரீகாசிமடம்' வழிவழி தருமை ஆதீனத்திற்குச் சீடர் மடமாக விளங்கிவருகிறது.

குருபரம்பரையில் ஆறுவது குருமூர்த்திகளாய் விளங்கியருளிய ஸ்ரீதிருஞான சம்பந்த தேசிக சுவாமிகளால் ஆட்கொள்ளப்பெற்றவர் தமிழாகரமுனிவர். இவர் இயற்றிய நூல்கள் பல உள்ளன. இக் குருமூர்த்திகளிடம் ஞானதீட்சை பெற்ற ஸ்ரீசம்பந்த சரணாலய சுவாமிகள் மைசூர் மன்னனிடம் பெரும் சிறப்புகள் பல பெற்றவர். 'கந்தபுராணச் சுருக்கம்' என்ற நூலை யாத்துத்தந்தார். இது விரிந்து கிடக்கும் கந்தபுராணத்தைச் சுருங்கிய பாடல்களில் தருவது.

ஒன்பதாவது குருமூர்த்திகளாகிய ஸ்ரீ திருநாவுக்கரசு தேசிக சுவாமிகள் காலத்தில் தென்இலந்தை படிக்காசுப் புலவர் என்பார் இவர்கள்பால் சந்நியாசம் பெற்றுப் புள்ளிருக்கு வேளூர்க் கட்டளைத் தம்பிரான் சுவாமிகளாக இருந்து 'புள்ளிருக்கு வேளூர்க்கலம்பகம்' என்னும் நூலைப் பாடினார். 'சித்தாந்த நிச்சயம்' என்னும் நூலொன்று ஒன்பதாவது குருமூர்த்திகளால் அருளிச் செய்யப்பெற்றது.

பத்தாவது குருமூர்த்திகளாகிய ஸ்ரீசிவஞான தேசிக சுவாமிகள் அருளிய பாடல்களின் தொகுதி ''திருவருட்பா'' என வழங்கி வருகிறது. காசியாத்திரை மேற்கொண்ட இவர்கள் அங்குள்ள ஸ்ரீவிஸ்வநாதர், ஸ்ரீவிசாலாட்சியம்மை, ஸ்ரீஅன்னபூரணி அம்மை முதலிய பதினோரு மூர்த்திகள் மீது இனிய பாடல்களைப் பாடியருளினார்கள். இவர்கள் காலத்தில் தமிழாகரமுனிவர், காவை அம்பல

வாணர், சைவ எல்லப்ப நாவலர் போன்ற தமிழ்ச் சான்ருேர்கள் திருமடத்திலிருந்து தமிழ்த் தொண்டாற்றியுள்ளார்கள்.

இருபத்து நான்காவது குருமூர்த்திகள் ஸ்ரீசண்முக தேசிக சுவாமிகள் 'ஞானசம்பந்தம்' என்னும் திங்கள் இதழைத் தோற்று வித்தருளினுர்கள். 'ஸ்ரீமெய்கண்டான் சித்தாந்த மாநாடு' என்னும் மாநாட்டை மிகச்சிறந்த முறையில் கூட்டி ஆய்வுக்களம் கண்ட வர்கள். இவர்கள் காலத்தில், 'ஆதீன இசைப்புலவர்' என்னும் பட்டத்தைத் திரு. எம். எம். தண்டபாணி தேசிகர் அவர்களுக்கும், 'ஆதீனத் தமிழ்ப்புலவர்' என்னும் பட்டத்தைத் திருவாளர்கள் ஈசான சிவாசாரியார், ச. தண்டபாணி தேசிகர், க. வச்சிரவேல் முதலியார், ஔவை, சு. துரைசாமிப்பிள்ளை, வயிநாகரம் வே. இராம நாதஞ்செட்டியார் போன்ற பெரியோர்களுக்கும் அளித்து அவர்களைச் சிறப்பித்து ஆதீனப் பணிகளில் பயன்கொண்டார்கள்.

ஆதீனத்தைச் சார்ந்து தமிழ்ப்பணியாற்றியவர்கள் பலர். வழி வழியாகப் பல்லோர் பணி செய்துள்ளனர். குமரகுருபரர் காலத்தில் வாழ்ந்திருந்த வெள்ளியம்பலவாண முனிவர் தருமையாதீனத் திருக் கூட்டத்து அடியவர்களுள் குறிப்பிடத்தகுந்தவர்கள். இவர்கள் செய்த நூல்கள் ஆறு. ஸ்ரீதிருஞானசம்பந்தர் துதியாக அமைந் தவை ஞானசம்பந்த தேசிகர் சமூகமாலை, திருஞானசம்பந்தர் தாலாட்டு, திருப்பள்ளி எழுச்சி என்பன ஆகும். உரைநூல்களாக இரண்டு செய்யப்பெற்றன. குருமுதல்வர் அருளிய 'முத்தி நிச்சயம்' என்னும் நூலுக்கு இவரால் வரையப்பெற்ற சிற்றுரையும் பேருரையும் மிகச்சிறந்த உரை நூல்களாகும், 'மிருகேந்திரம்' என்னும் நூல் இவரால் செய்யப்பெற்றது, இஃது உபாகமங்களுள் ஒன்று.

குமரகுருபர சுவாமிகள், வெள்ளியம்பலவாண முனிவர், சம்பந்த சரணலயர், தமிழாகர முனிவர், சொக்கபுரம் அழகிய சிற்றம்பலவர், படிக்காசு முனிவர், சிதம்பரநாத முனிவர், சிவானந்த முனிவர், புனைச் சிவப்பிரகாசர், காவை அம்பலவாண முனிவர், சண்முக சுவாமிகள் எனப் பலர் இயற்றிய சிவஞானத் தமிழ்நூல்கள் தருமையாதீனம் தமிழ் உலகுக்கு வழங்கிய அருட்கொடையாகும்.

'இராமநாடகக் கீர்த்தனை' என்னும் நூலை எழுதிய சீகாழி அருணசலக்கவிராயரை ஆதரித்து, சீகாழிப்பள்ளு, சீகாழிஅந்தாதி, சீகாழிப்புராணம் என்னும் மூன்று நூல்களை அவரால் வழங்கச் செய்தது தருமை ஆதீனம். சிறந்த சாகித்தியங்கள் பல செய்த சீகாழி முத்துத்தாண்டவர், தமிழ் அறிஞராகத் திகழ்ந்த சிவ.கண்ணு சாமிப்பிள்ளை போன்ருேரும் ஆதீன ஆதரவில் பணி செய்தவர்களா

வர். திரிசிரபுரம் மீனுட்சிசுந்தரம் பிள்ளை அவர்களைக் கொண்டு குறுக்கைத் தலபுராணம், திருத்துருத்தித் தலபுராணம் என்னும் இரண்டு பெரிய தலபுராணங்களையும், ஆச்சாள்புரத்து எழுந்தருளி யிருக்கும் உமையம்மைமீது திருவெண்ணீற்று உமையம்மைபிள்ளைத் தமிழ் என்னும் தமிழ் நூலையும் மற்றும் திருக்கற்குடிமாலை என்னும் நூலையும் ஆதீனம் எழுதச் செய்தது. இதேபோல் கொட்டையூர் சிவக்கொழுந்து தேசிகரைக் கொண்டு ஆச்சாள்புரத் தலபுராணம், சீகாழி வடுகநாத தேசிகரைக் கொண்டு தென்திரு முல்லை வாயில் தலபுராணம் என்னும் இரண்டு புராணங்களையும் பாடச்செய்தது. திருப்பறியலூர் தலபுராணத்தைத் திருவாவடுதுறை ஸ்ரீபின்வேலப்ப தேசிகரைக்கொண்டு பாடச் செய்தது. இங்ஙனம் தக்கவர்களைக் கொண்டு தமிழ்நூல்களைப் பாடவைத்துத் தமிழும் சைவமும் தழைக்க வேண்டுமென்பதில் தருமை ஆதீனம் எடுத்துக்கொண்ட முயற்சிகள் பலப்பல.

தருமையாதீனத்தின் 25ஆவது குருமூர்த்திகளாகிய ஸ்ரீலஸ்ரீ கயிலைக்குருமணி அவர்கள் திருமுறைகளுக்கு உரைகாண வேண்டும் என்று திருவுள்ளம் கொண்டு அப் பணியினைத் தக்க வர்கள் மூலம் செய்வித்தருளினுர்கள். திருமுறைகளுக்குத் தருமை ஆதீனப் பதிப்பாக வெளிவந்துள்ள உரைநூல்களைப் பலரும் மன மாரப் பாராட்டியுள்ளார்கள்.

1924ஆம் ஆண்டு விரிவாகத் தொடங்கப்பெற்ற தருமை ஆதீன வெளியீட்டுப்பணி 60 ஆண்டுக் காலமாக இடையருது நிகழ்ந்து வருகின்றது. 1924ஆம் ஆண்டுக்கு முன்னரும் நூல்கள் அச்சிட்டு வெளியிடப்பெற்றன.

தருமை ஆதீனம் தமிழுக்கு ஆற்றி வந்திருக்கும் அரிய பெரிய பணிகளில் ஒன்று அறநூலாகிய திருக்குறளுக்குப் பல்வேறு உரை யாசிரியர்களின் உரைகளைத் திரட்டி வெளியிட்ட திருக்குறள் உரை வள வெளியீடு ஆகும். பல்லாயிரக்கணக்கான ரூபா பொருட் செலவில் ஒரு பல்கலைக்கழகம் மேற்கொள்ள வேண்டிய இப்பெரிய பணியைச் சமய வளர்ச்சி நோக்கில் எழுந்த தருமை ஆதீனம் தமிழ் மொழி வளர்ச்சி நோக்கில் செய்திருப்பது குறிப்பிடத்தக்கது ஆகும். 25ஆவது குருமூர்த்திகள் காலத்தில் இவ்வரிய பணி மகாவித்து வான் திரு. ச. தண்டபாணி தேசிகர் அவர்களைக் கொண்டு நிறைவு பெற்றது.

(தொடரும்)

———

# மொழிபெயர்ப்பின் சிறப்பியல்புகள்

15—1—85 செவ்வாய்க் கிழமையன்று சென்னைத் திருவள்ளுவர் கோட்டத்தில் சிறப்பாக நடைபெற்ற திருவள்ளுவர் திருவிழாவில் புது நூல்களை எழுதிய தமிழறிஞர்கள் அன்றி மொழிபெயர்ப்புத் துறையிலும் ஈடுபட்டு, தமிழ் வளர்ச்சிக்குத் தொண்டாற்றிய அறிஞர்களையும்தமிழக அரசு பாராட்டிப்பெருமைப்படுத்தியது. மொழிபெயர்ப்புத்துறையில் பெருமைப்படுத்தப்பட்ட சிலருள் சைதை ஆசிரியக் கல்லூரி முன்னுள் முதல்வரும் ஓய்வுபெற்ற தமிழ் வளர்ச்சி இயக்குநரும் ஆகிய திரு. மு. ரா. பெருமாள் முதலியாரும் ஒருவர். அவரைக் கண்டு பேசி மொழிபெயர்ப்பின் சிறப்பு இயல்புகளை எடுத்துரைக்குமாறு கேட்டபோது, அவர் பின்வருமாறு கூறினர் :

''ஆங்கிலத்திலிருந்து தமிழுக்கோ தமிழிலிருந்து ஆங்கிலத்திற்கோ மொழிபெயர்ப்போர்க்கு ஆங்கிலம் தமிழ் ஆகிய இரண்டு மொழிகளிலும் சிறந்த பயிற்சியும் தேர்ச்சியும் இருக்கவேண்டும்; மொழிபெயர்க்கப்படும் பொருளில் (வரலாறு, பொதுஅறிவு, சமயம், உளவியல் போன்ற துறைகள்) உயர்ந்த புலமை இருக்கவேண்டும். ஆங்கிலத்திலிருந்து தமிழில் பெயர்ப்பதாக இருந்தால் மொழிபெயர்ப்பாளர் தெளிவான அழகிய பிழையற்ற உரைநடை எழுதும் ஆற்றலும் பயிற்சியும் பெற்றவராக இருக்கவேண்டும். தமிழிலிருந்து ஆங்கிலத்திற்கு மொழிபெயர்ப்பதாக இருந்தாலும் மேலே சொன்ன ஆற்றலை ஆங்கில உரைநடை எழுதுவதில் பெற்றிருக்க வேண்டும். படிப்போர் மொழிபெயர்ப்பு நூல் எது? மூலநூல் எது? என்று மயங்கும் அளவிற்கு நடை சிறப்பாக இருக்கவேண்டும், அதே சமயத்தில் மூலநூல் ஆசிரியரின் கருத்து சிறிதும் பிறழாமலும் அவர் எண்ணியதை உணர்ந்து அதே எண்ணம் மொழிபெயர்ப்பு நூலிலும் தெளிவாய்த் தெரியுமாறும் எழுதவேண்டும். அத்தகைய மொழிபெயர்ப்பே சிறந்த மொழிபெயர்ப்பாகும்.'' எடுத்துக்காட்டுக்கு அவர் மொழிபெயர்த்த தென்னிந்திய வரலாறு என்னும் நூலைப் பார்க்கச் சொன்னர். அது K. A நீலகண்ட சாஸ்திரி ஆங்கிலத்தில் எழுதிய ''A History of south India'' என்பதன் மொழிபெயர்ப்பாகும். குறிப்பாகத் தமிழ் மொழிபெயர்ப்பு நூலின் இரண்டாம் பகுதியில் உள்ள ''சமயமும் மெய்யுணர்வும்'' ''கட்டடக்கலையும் கவின்கலைகளும்'' என்னும் அதிகாரங்களைப் படித்துப் பார்க்கச் சொன்னர்.

அவருக்குப் பொன்னுடை போர்த்திச் சிறப்பித்த தமிழக அரசைப் பாராட்டி அவரது தமிழ்த்தொண்டு மேலும் வளர்க என்று வாழ்த்துகிறோம்.

———

## வருக வருக தமிழகத்தின் நாயகனே வருக!

['கலைமாமணி' கவிஞர்கோ. புத்தனேரி சுப்பிரமணியம்]

வருக வருக தமிழகத்தின் நாயகனே வருக!
மாசில்லாத மாமழைபோல் தூயவனே வருக!
தரும மெல்லாம் தலைகாக்கும் சான்று காட்டி நின்றாய்
தாக்கிய நோய் அத்தனையும் விலகிஓட வென்றாய்
(வருக வருக)

அமெரிக்காவில் சிகிச்சைபெற்ற அற்புதப் பொன்மேனி
ஆயுள்பலம் பெற்ற நீயே அரசியல் விஞ்ஞானி
எமனை வென்ற மாமனிதன் என்றபுகழ் சேர்த்தாய்
எத்தனையோ கோடிமக்கள் இதயமெல்லாம் ஈர்த்தாய்!

மனவலிமைப் புரட்சியினால் தேர்தல் வெற்றி கண்டாய்
மறுபடியும் முதல்வரெனும் மகுடம் சூடுகின்றாய்,
உனதுமுகப் பொலிவைக்கண்டு துள்ளும்எங்கள் உள்ளம்
உன்பெருமை ஒலிப்பதுபார் அன்பு மக்கள் வெள்ளம்.

மறுபிறவி இரண்டு முறை எடுத்த விந்தை கண்டோம்
மருத்துவரே வியக்கின்ற விந்தை இதுவன்றோ?
வரலாறு படைத்துவிட்டாய் மக்கள் திலகம் நீயே
வள்ளலே அன்புமழை பொழிய வருக வாழ்க!

சத்தியத் தாய் பெற்ற புகழ் உத்தமனே வருக!
சாதனைகள்புரிந்த புரட்சித் தலைவனே நீ வாழ்க!
சத்துணவுத் திட்டம் கண்ட வித்தகனே வருக!
தமிழ் வளர்க்கும் புரவலனே வருக நீடு வாழ்க!

குறிப்பு: மாண்புமிகு தமிழக முதல்வர் டாக்டர் ம. கோ. இராமச்சந்திரன் அவர்கள் அமெரிக்காவில் பெற்ற மருத்துவத்தாலும், பலகோடி மக்களின் இதய வழிபாட்டின் ஆற்றலாலும், பொல்லாத நோய் நீங்கிப் பொலிவோடும் வலிவோடும், 1985 பிப்ரவரி 4இல் தமிழகம் திரும்பிய சிறப்பை வாழ்த்தும் கோலாகல வரவேற்புப் பாடல்.

———

# பாவாணர் பாதையில்....

## [பேராசிரியர் இரா. மதிவாணன்]

(பரல் ௪, கசசஆம் பக்கத் தொடர்ச்சி)

**நோக்கு :**

அகரமுதலி தொகுப்பவர்கள் இதனை யாருக்காகச் செய்கிறோம், எப் பயனுக்காகச் செய்கிறோம் என்பதை முதலில் வரையறுத்துக் கொள்வார்கள். ஆங்கிலத்தில் சொற்பிறப்பியல் அகரமுதலி தொகுத்த பெருமகனார் ஒருவர் "This Etymological Dictionary is meant for the common man in the street" என்று குறிப்பிட்டிருக்கிறார். பாவாணரும் இதனையே தெளிவுபடுத்தினார். சொற்பிறப்பியல் அகரமுதலியில் சொல்லின் பொருளறிவது மட்டு மன்றி அப் பொருளும் சொல்லும் எவ்வாறு வளர்ந்துள்ளன என்பதை ஏரணித்துக் காட்டுவது (logical reasoning) பொதுமக்கள் முதல் அறிஞர் வரை மொழி இயல்பையும் சொற்பொருள் ஆழத்தையும் செம்மையாகப் புரிந்துகொள்ள உதவுதலின் தமிழ் வளர்ச்சிப் பணிகளில் சொற்பிறப்பியல் அகரமுதலி தொகுப்பு தலைமையானது என்று கருதினார்.

பாவாணர் திட்டம் இதுவரை எம் மொழியிலும் அமைக்கப் படாத திட்டம். அதனைப் பின்வரும் பட்டியலால் உணரலாம்.

| சொற்பிறப்பியல்— மேனாட்டார் நோக்கில் | சொற்பிறப்பியல்— பாவாணர் நோக்கில் |
| --- | --- |
| (1) சொற்பிறப்பு என்பது மேனாட்டார் நோக்கில், ஒரு சொல் வேற்றுமொழிச் சொல்லாயின் எந்த மொழியிலிருந்து வந்தது என்பதைக் காட்டுவதும், தாய்மொழிச் சொல்லாயின் அச் சொல்லுக்குக் காலத்தால் முற்பட்ட சொல் வடிவத்தைக் (earliest recorded word) காட்டுவதுமாகும். அத் தாய் மொழிச் சொல் எவ்வாறு தோன்றி வளர்ந்தது என்று ஆராய்வதில்லை. | (1) தாய்மொழிச் சொற்களை மட்டும் தலைமையாக எடுத்துக்கொண்டு, காலத்தால் முந்தைய சொல்லாட்சியை மட்டும் கருத்தில் கொள்ளாமல் அதற்கும் முந்தைய வேர் மூலங்களைத் தாமே வகுத்த நெறிமுறைகளின் அடிப்படையில் கணித்துச் சொல்வது. இதனை வேர்மூலச் சொற்பிறப்பு என்றும், வடிவ மீட்டமைப்புச் சொற்பிறப்பு என்றும் இரு வகையில் ஆய்ந்திருக்கிறார். |

| | |
|---|---|
| (2) எல்லாச் சொற்களுக்கும் சொற்பிறப்பு கூறுவதில்லை. ஆங்கிலம் 8 இலக்கம் சொற்கள் கொண்ட மொழியாயினும் ஆங்கிலச் சொற்பிறப்பியல் அகர முதலிகளில் சற்றேறப்ப 15,000 சொற்களுக்கு மட்டும்தான் சொற்பிறப்பு கூறப்பட்டிருக்கிறது. | (2) எல்லாச் சொற்களுக்கும் சொற்பிறப்பு கூறும் முயற்சி மேற்கொள்ளப்படுகிறது. சொற்பிறப்பு காண மேலும் சான்றுகள் தேவைப்படும் இடங்களில் மட்டும் சொற்பிறப்பு கூறுதல் நிறுத்தி வைக்கப்பட்டிருக்கிறது. களப்பணி வாயிலாகத் தக்க சான்றுகள் கிடைத்ததும் அவற்றுக்கும் சொற்பிறப்பு கூறப்படும். |
| (3) சொற்பிறப்பு அகர முதலியை ஒரே மடலமாகத்தான் இதுவரை வெளியிட்டிருக்கிறார்கள். சொற்பிறப்பு அகர முதலியில் குறிப்பிட்ட மொழிக் குடும்பத்தைச் சார்ந்த இனச் சொற்கள் மட்டும் காட்டப்பட்டுள்ளது. | (3) சொற்பிறப்பு அகர முதலி பன்மடலங்களாக வெளியிட நினைத்தார். திரவிடமொழிக் குடும்பம் மட்டுமன்றி முதன் முதலாக இந்தைரோப்பியா மொழிக் குடும்பத்திலிருந்தும், ஏனைக் குடும்ப மொழிகளிலிருந்தும் இனச்சொல் காட்டப்படுகிறது. |
| (4) சொற்களின் மிகவும் தொன்மையான செவ்விய வடிவத்தை மரபுநோக்கியுணர்ந்து ஏரணித்துக் காட்டும் வடிவ மீட்டமைப்பு முறை பின்பற்றப்படுவதில்லை. | (4) சொற்களின் தொல் வடிவத்தை மரபுநோக்கி மீட்டமைத்திருக்கிறார். |
| (5) சொற்பிறப்பு நெறி முறைகள் வகுக்க வேண்டுமென்ற கட்டுப்பாட்டை வற்புறுத்தவில்லை. | (5) சொற்பிறப்பு நெறி முறைகளை வகுத்து அதற்கியையச் சொற்பிறப்பியல் அகரமுதலி அமையவேண்டுமென்று விரும்பினார். |
| (6) தாய்மொழியில் புகுந்த வேற்றுமொழிச் சொற்களுக்குத் தாய் மொழியில் சொல் படைப்பதில்லை. | (6) வேற்றுமொழிச் சொற்களுக்குத் தாய்மொழியில் புதிய சொல் படைப்பது இன்றியமையாதது. |

சொன்முலம்:

சொற்பிறப்பு கண்டறிவதற்குக் காலத்தால் முந்தைய எழுத்து வடிவச் சான்றுகளையோ, பேச்சு வழக்குச் சான்றுகளையோ அடிப்

படையாகக் கொண்டு அடிப்படைச் சொன் மூலங்களாகக் கொள்கின்றனர். பாவாணரும் இதுவரை கிடைத்த எழுத்து வடிவச் சான்றுகள், பேச்சு வழக்குச் சான்றுகளை அடிப்படையாகக் கொள்வதோடு அவற்றின் வளர்ச்சிப்படிமுறைகளில் காணும் ஒழுங்குமுறைகளை நுனித்து ஆய்ந்து அவற்றிற்கும் மூலமான தொல் வடிவங்களை ஏரணித்து (logical reasoning) ஆணிவேர்களாகச் சொல்லின் அடிப்படை மூலங்களை வடிவ மீட்டமைத்துக் கொள்கிறார். இந்நெறிமுறை, இதுவரை உலகில் எந்தச் சொற்பிறப்பியல் அறிஞரும் கண்டறியாததும், பாவாணரே கண்டுபிடித்ததும் ஆகிய சிறப்புக்குரியது. ஆணிவேர்கள் என்றும் அடிப்படைச் சொன்மூலங்கள் என்றும், அவரால் வகுக்கப்பட்டன. உன்னித்துக் கொள்ளப்பட்டவை (guess) அல்ல என்பதற்கு அவர் கையாண்ட ஏரணநெறியே சான்றாகும்.

எடுத்துக்காட்டிற்கு 'பலாப்பழம்' என்னும் சொல்லுக்குச் சொல்லின் மூலமாகப் பிறர்கொண்ட சொன்மூலமும், பாவாணர் காட்டும் வேரும் வரலாறும் இவண் தரப்படுகிறது.

1. பல்—பல்ல—பலா = பல சுளைகளைக் கொண்டது.
2. பல்—(பல்லு)—பலா = பல் பல்லாக வித்துகளைக் கொண்டது (இளங்குமரனார்).
3. பல்—பல்லா—பலா = பல் போன்ற கூரிய முட்களைப் பலவாகக் கொண்டது.
4. பலாப்பழம் முதன்முதல் வெளிநாட்டிலிருந்து வந்ததென்றும் வெளிநாட்டு மொழியில் முதலில் பல்லா என்று வழங்கிப் பிறகு 'பலா' என்று திரிந்திருக்கலாம், என்றும் கருதுவோர் உளர்.
5. பல் (பரு)—பலவு—பலா = பருத்த வடிவுடையது (பாவாணர்).

இந்நிலையில், ஒரு சொல் பல்வேறு காரணங்களால் தோன்றியிருக்கலாம் என்னும் சூழலில், இதுதான் சரியான காரணம் என்று நுனித் தறிவதில் பலரும் திணறுவதைக் காண முடிகிறது. 'பலா' என்னும் பெயர் வந்ததற்குக் காட்டப்பட்ட முதல் மூன்று காரணங்களும், பல்வகைப் பழங்களுக்கும் பொருந்துவதால் அவற்றைப் பாவாணர் விலக்கிவிட்டார். வெளிநாட்டிலிருந்து வந்த செடிகொடிகளுக்கும், பழ வகைகளுக்கும் பழந்தமிழர் தமிழிலேயே புதுச் சொல்லைப் படைத்துக்கொண்டதால் நான்காவது காரணத்தையும்

விலக்கிவிட்டார். ஐந்தாவது காரணமே பலாவுக்கு அப் பெயர் பொருந்திய காரணம் என்று ஏரணித்து உறுதிப்படுத்தியிருக்கிறார்.

வடிவில் பெருத்த கரடியைப் பல்லம் என்றும், சிவிகை[1] (சிறியது)யினும் பெரியதைப் பல்லக்கு என்றும், பண்டுதொட்டு வழங்கிவரும் அடிப்பட்ட சொல்லாட்சிகளை எடுத்துக்காட்டி வடிவத்தில் பெரியதாயிருப்பதால்தான் பலாப்பழம் அப் பெயர் பெற்றது என்று நிறுவினார். பரு என்னும் சொல்லும், பல் என்பதையே வேராகக் கொண்டது. பாவாணர் வழியில் சொல்லாய்வு செய்ய முனைவோர் பாவாணர் நெறிமுறையை முழுமையாகப் புரிந்துகொண்டால் நற்பயன் விளையும். ஒவ்வொரு சொல்லுக்கும் வேர் மூலம் காணப் பாவாணர் எத்துணை அரும்பாடுபட்டிருக்கிறார் என்பதற்கும் பொருந்தாத சொன் மூலங்களை எத்துணை ஆழ்ந்த சிந்தனைகளுக்குப் பிறகும் விலக்கியிருக்கிறார் என்பதும் நுனித்து நோக்குவோர்க்குத் தெற்றெனப் புலப்படும்.

(தொடரும்)

---

1. எடை குறைந்து எடுப்பதற்கு மிக எளிதாக இருக்கும் பொருளைச் சிவுங்கென்று இருக்கிறது என்னும் வழக்கை ஒப்பிட்டு நோக்குக.

---

## வி. ஜி. பி. தமிழ் இலக்கியப் பரிசு

மழலைக் கவிஞரும், 'தமிழரசு' இதழின் நிருபரும், கழக அன்பருமான பி. வி. கிரி, சிறந்த பத்திரிகையாளருக்கான வி. ஜி. பி. தமிழ் இலக்கியப் பரிசினைப் பெறத் தேர்ந்தெடுக்கப் பட்டுள்ளார். வி. ஜி. பன்னீர்தாஸ் நிறுவனத்தார் வி. ஜி. பி. சந்தனம்மாள் அறக்கட்டளையின் சார்பில், ஆண்டுதோறும் சிறந்த பத்திரிகையாளர், கவிஞர்கள், எழுத்தாளர்கள், ஓவிய-புகைப்படக் கலைஞர்கள் ஆகியோருக்குப் பரிசுகள் வழங்கிச் சிறப்பித்து வருகின்றனர். அந்த வகையில் 1984ஆம் ஆண்டுக்கான இப் பரிசினை 27 பேர் பெறுகின்றனர். இஃது 1001 ரூபா, யும் பாராட்டு விருதும் கொண்டது.

## தமிழ்ப் பேராசிரியர் டாக்டர் ஆறு. அழகப்பன்

அண்ணுமலைப் பல்கலைக்கழகத் தமிழ்ப் பேராசிரியராகக் கலை மாமணி டாக்டர் ஆறு. அழகப்பன் நியமிக்கப்பெற்றுள்ளார்.



திரு. ஆறு. அழகப்பன் அவர்கள் நாட்டுப்புறவியல், நாடக இயல் இவைகளில் ஆய்வு செய்து பட்டங்கள் பெற்றவர். தமிழக அரசு இவரது நாடகப் பணியைப் பாராட்டிக் கலை மாமணி விருது அளித்தது. பல நாடுகளுக்குச் சென்ற அனுபவம் பெற்ற இவர் இந்திய மொழிகள் ஆய்வு நிலைய இயக்குநருமாகச் சிறந்த பணியாற்றினர். கடந்த 25 ஆண்டுகளாகத் தொடர்ந்து தமிழ்ப்பணி செய்துவரும் இவருக்குக் கலைக் காவலர், தமிழ் அண்ணல், தமிழ்த் தூதுவர், அருந் தமிழ்ச் செம்மல் முதலிய பட்டங்களைப் பல்வேறு சங்கங்கள் கொடுத்துச் சிறப்பித்திருக்கின்றன. ஐந்தாவது உலகத் தமிழ் மாநாட்டில் தமிழன்னைக்கு ஓர் உருவம் கண்ட பெருமையும் இவருக்குண்டு. இவரது திருமலை நாயக்கர் நாடகத்தை திரு. ஹெரான் இராமசாமி மேடை நாடகமாகச் சிறப்பாக அரங் கேற்றி வருகிறார். வளரும் விஞ்ஞான அறிவியலுடன் பழமையான தமிழும் தன்னை வளர்த்துக்கொண்டு செல்வ மொழியாகவேண்டும். மரபு பிறழாப் படைப்பிலக்கியங்கள் தமிழில் தோன்றவேண்டும் என்ற குறிக்கோள்கள் கொண்ட இவர் ஆண்டுதோறும் ஆகஃட்டு 15ஆம் தேதியன்று மத்திய சிறைச்சாலைக் கைதிகளுக்குக் கலைநிகழ்ச்சி நடத்துதல், அங்குள்ள நூலகங்களுக்கு நூல்கள் அன்பளிப்பாக வழங்குதல் ஆகிய சமூகத் தொண்டுகளைத் தொடர்ந்து செய்து வருகிறார்.

இவர் தொடர்ந்து இந்திய மொழிப் புலத்துறை முதன்மையராகவும் ஆட்சிக்குழு உறுப்பினராகவும் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளார்.

---

### மே. வீ!

உதிர்ந்த தமிழ்ப் பற்று உலவிடுமிந் நாளில்
முதிர்ந்த தமிழ்ப்புலமை மே.வீ.—பதிப்பித்த
நூல்போல் எழுத்தெண்ணி நும்போல்நற் றெண்டாற்ற
கால்வழியாய் ஆர்வருவார் காட்டு!

தெ. முருகசாமி

முதல்வர், இராமசாமி தமிழ்க் கல்லூரி,
காரைக்குடி.

# செய்திகள்

## பெங்களூர் தமிழ்ச் சங்கத்தில்

### வ. உ. சி.—மறைமலையடிகளார் படத் திறப்பு

முன்னரே 15 தமிழ்ப் பெருமக்களின் படங்களைத் திறந்து வைத்திருக்கும் பெங்களூர் தமிழ்ச் சங்கக் கட்டிடத்தில் கடந்த 7—1—85 இல் கப்பலோட்டிய தமிழர் வ. உ சிதம்பரனார், மறைத்திரு மறைமலையடிகளார் ஆகிய இரு தமிழ்ப் பெரியார்களின் படங்களும் திறந்து வைக்கப்பெற்றன. மறைமலையடிகளார் திருவுருவப் படத்தைக் கழக ஆட்சியர் உயர்திரு. இரா. முத்துக்குமாரசாமி அவர்களும், வ. உ. சி. அவர்களின் படத்தை இலங்கையைச் சேர்ந்த கவிஞர் காசி ஆனந்தன் அவர்களும் திறந்து வைத்து உரையாற்றினர். இப் படத்திறப்பு விழாவிற்குத் தமிழ்ச் சங்கத் தலைவர் திரு. தண். கி. வெங்கடாசலம் அவர்கள் தலைமை தாங்கினர்.

மறைமலையடிகளார் படத்தைத் திறந்து வைத்த கழக ஆட்சியர் உயர்திரு. முத்துக்குமாரசாமி அவர்கள் மறைமலையடிகளாரின் மாண்புகளை விரித்துரைத்தார். அடிகளார்க்கு வடமொழியிடத்தில் பகைமை இல்லை என்றும், ஆனல் வடமொழி மேலாண்மையினல் தமிழ் கெடுகின்ற காரணத்தால்தான் அதனை எதிர்க்க வேண்டியிருந்தது என்றும் குறிப்பிட்டார்.

வ. உ. சி. அவர்களின் படத்தைத் திறந்து வைத்த கவிஞர் காசி ஆனந்தன் அவர்கள், தமிழை அழிக்க எந்த மொழி வந்தாலும் அதனை எதிர்த்திட வேண்டும் எனவும், இலங்கைத் தமிழர்களின் இன்னல்கள்பற்றியும் கூறி, இலங்கைத் தமிழன் மார்பில் குண்டுகளை ஏற்றுக்கொண்டிருக்கும் இவ் வேளையில் தமது மார்பு மாலைகளை ஏற்றுக்கொள்ளாது எனக் கூறித் தமக்களித்த மலர் மாலையைத் தமிழர்நலவாழ்வு நிதிக்காக ஏலம் விட்டார். அதனைக் கர்னடகத் தமிழர் பேரவைத் தலைவர் திரு. பக்தவத்சலம் அவர்கள் 150 ருபா கொடுத்துப் பெற்றுக்கொண்டார். மற்றும் பலர் நன்கொடைகள் வழங்கினர்.

விழாவில் எழுத்தாளர் சு. சமுத்திரம், கர்னடக தி. மு. கழக அமைப்பாளர் கி. சோழன், தஞ்சை மா. இராசேந்திரன், ப. சண்முக சுந்தரம், ப பக்தவத்சலம் ஆகியோர் கலந்துகொண்டனர். சங்கச் செயலர் நா. தென்னவன் நன்றி நவில விழா இனிது நிறைவுற்றது.

## கவிஞர் பேகன் நூல்கள் வெளியீட்டு விழா

உயர்திரு கவிஞர் பேகன் (பாண்டியன்,) ஐ. ஏ. எஸ். (கூடுதல் மாவட்ட ஆட்சித் தலைவர், தஞ்சாவூர்) அவர்கள் இயற்றிய "பேகன் கவிதைகள்", "சிவயோக சித்தி". "வானில் உலவும் ஆலமரம்" ஆகிய மூன்று நூல்களின் வெளியீட்டு விழா 18—1—'85 மாலை, சென்னைக் கந்த கோட்ட வசந்த மண்டபத்தில் மிகச் சிறப்பாக நடைபெற்றது. கழக ஆட்சியர் உயர்திரு இரா. முத்துக்குமாரசாமி, எம். ஏ., பி. லிட். அவர்கள் வரவேற்புரை நிகழ்த்தினர். சட்டமன்ற உறுப்பினர் உயர்திரு. செ. மாதவன், பி. காம்., பி. எல். தலைமை ஏற்ருர்.

# பெங்களூர்த் தமிழ்ச் சங்க விழா

## (6—1—1985)



கழக ஆட்சியர் திரு
இரா. முத்துக்குமாரசா
அவர்கள் மறைமலைய
ளார் படத்தைத் திறந்
வைத்தல்



கவிஞர்
திரு. காசி. ஆனந்தன்
அவர்கள் வ. உ. சி.
அவர்களின் படத்தைத்
திறந்து வைத்தல்



விழாவில் கலந்துகொ
பெருமக்கள்

''பேகன் கவிதை''களைத் தமிழ் வளர்ச்சி பண்பாட்டுத் துறை இயக்குநர் டாக்டர் ஔவை து. நடராசன் அவர்களும், 'வானில் உலவும் ஆலமரம்' என்னும் புதுக்கவிதைத் தொகுப்பினை 'அமுத சுரபி' ஆசிரியர் டாக்டர் விக்ரமன் அவர்களும், 'சிவயோக சீர்த்தி' என்னும் நூலினைத் தமிழ்ப் பழங்கலை இயக்கத்தின் இயக்குநர் திருக்குறளார், வி. முனுசாமி அவர்களும் வெளியிட்டனர். பொ. இல. பொன்னுசாமி, இ. ஆ. ப., கவிஞர் ந. ரா. முருகவேள், டாக்டர் பெ. சுந்தரம், கவிஞர் இளங்கண்ணன், கவிஞர் கானவன் ஆகியோர் பாராட்டுரை வழங்கினர். கவிஞர் பேகன் ஏற்புரைக்குப் பின், கந்தகோட்ட முதுநிலை அறங்காவலர் திரு. பி. பால சுப்பிர மணியம் அவர்கள் நன்றியுரை கூற விழா இனிது நிறைவுற்றது.

## தமிழ்த் தொண்டருக்குப் பாராட்டு

இந்த ஆண்டு வள்ளுவர் கோட்டத்தில் 15—1—85 அன்று நடைபெற்ற திருவள்ளுவர் திருநாள் விழாவில் தமிழ்த் தொண்டர் கோ. முத்துப்பிள்ளை அவர்களுக்குத் தமிழக அரசு பொன்னுடை போர்த்திச் சிறப்பித்துள்ளது. சிறந்த மொழிபெயர்ப்பாளர் என்று தேர்ந்தெடுக்கப்பெற்றுள்ள கோ. முத்துப்பிள்ளை அவர்களுக்கு, டாக்டர் நாவலர் பொன்னுடை போர்த்தினர். தமிழ்த் தொண்டர் கோ. முத்துப்பிள்ளை அவர்கள் கடந்த முப்பத்தைந்து ஆண்டுகளுக்கு மேலாக அன்னை மொழியாம் ஆட்சிமொழிக்கு அருந்தொண்டு ஆற்றி வருகின்றார். ஆட்சிமொழி வகுப்புகளை நடத்துவதில் நீண்ட பட்டறிவு பெற்றவர். ஆட்சிமொழி குறித்த இரண்டு இனிய நூல்களை இயற்றியுள்ளார். இவர் இப்போது ஆட்சிமொழி ஆணையத்தின் உறுப்பினராகப் பணியாற்றி வருகின்றார்.

## வேலூரில் ஐம்பெரு விழா

வேலூர் இலக்கிய அன்பர்கள் வட்டத்தின் சார்பில் 19—1—85 சனி மாலை வேலூர் வணிக வைசிய திருமண மண்டபத்தில் நிகழ்ந்த ஐம்பெரும் விழாவிற்குத் திரு. வெ. சோலைநாதன் தலைமை ஏற்றார். கவிஞர் வேலூர் ம. நாராயணன் இயற்றிய 'பொற் காலம்' கவிதை நூலினை இலங்கைக் கவிஞர் காசி ஆனந்தன் வெளியிட்டுப் பாராட்டிப் பேசினார். கவிக்கோ அப்துல் ரகுமான் டாக்டர் பட்டம் பெற்றமையைப் பாராட்டிப் புதுக் கவிதைத் தந்தை எனும் விருது வழங்கப்பெற்றது. கவிஞர் திருச்சி தியாகராசன் வினாக்கள் காணும் வினாக்கள் எனும் தலைப்பில் பேசினார்.

பொற்காலம் முதல் நூலினை திருமதி. அங்கம்மாள் கந்தசாமி பெற்றுக்கொண்டார். வேலூர் ம. நாராயணன் அவர்கட்குத் திரு. வி. எஸ். இரமேஷ் குமார் ஒரு பவுன் பொன் மோதிரம் பரிசளித்தார். அறிஞர்கள் பலர் பாராட்டிப் பேசினர். வாழியூர் வே. இராசவேலன் பொன்னுடை அணிவித்தார். ச. குமரவேல் வரவேற்றார். வேலூர் ம. நாராயணன் ஏற்புரை ஆற்றினார். திரு. மா. சண்முக சுந்தரம் நன்றி கூறினார்.

## திரு. அ. வெ. சுப்பிரமணியன் அவர்களின் மணிவிழா

கழக நூலாசிரியருள் ஒருவரும், தென்னகத் தொடர் வண்டித் துறை முன்னாள் கூடுதல் பொது மேலாளருமான தமிழறிஞர்

அ. வெ. சுப்பிரமணியம், பி. எசி., பி. டி., டி. எஸ். எஸ். அவர்களின் மணிவிழா 2—2—85இல், உயர்நீதிமன்ற நீதிபதி மாண்புமிகு எஸ். சாமிக்கண்ணு அவர்கள் தலைமையில், மயிலை பாரதீய வித்தியாபவனில் மிகச் சிறப்பாக நடைபெற்றது.

இவர் தமிழிலும் வடமொழியிலும் வல்லவர். சென்னைப் பல்கலைக் கழக அறக்கட்டளைச் சொற்பொழிவுகள் பல செய்துள்ளனர். அமெரிக்கா கானடா ஆகிய நாடுகளில் இலக்கியச் சொற்பொழி வாற்றிய வித்தகர். சங்க இலக்கியங்களில் பேரீடுபாடு கொண்டவர், நல்ல எழுத்தாளர்—பேச்சாளர்—சிறந்த கட்டுரையாளர். "Sips from the Sangam Cup" என்னும் இவரது ஆங்கில நூல், இவரது இலக்கியப் புலமையினையும், ஆங்கிலப் புலமையினையும் பறைசாற்றுகின்றது. மற்றும் பதிற்றுப்பத்து, முத்தொள்ளாயிரம் ஆகிய இலக்கியங்களை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்திருக்கிறார். தொடர் வண்டித்துறை முத்தமிழ் மன்றத்தார் இவர்தம் ஆற்றல்களை உணர்ந்து "சங்க மாமணி" என்னும் பட்டத்தினை வழங்கியுள்ளமை குறிப்பிடத் தக்கது.

மணிவிழாக் கண்ட திரு. அ. வெ. சுப்பிரமணியனார் இலக்கியத் தொண்டாற்ற மேலும் பல்லாண்டுகள் வாழ்ந்து பல விழாக்களைக் காண வேண்டும் என வாழ்த்துகிறோம்.

## சைதைத் தமிழ்ச் சங்கம்—தமிழ்த் திருநாள்

14—1—85இல் சைதைத் தமிழ்ச் சங்கத்தின் சார்பில் திருக் காரணிசுவரர் கோயிலில் திரு. த. பாலசுந்தர முதலியார் அவர்கள் தலைமையில் தமிழ்த் திருநாள் கொண்டாடப்பட்டது. வாழ்வியற் புலவர் சொ. ர. தேமொழியார் அவர்களுக்குச் சிறப்புச் செய்து வாழ்த்துரை வழங்கப்பட்டது. திரு ந. கணேசன் வரவேற்புரை ஆற்றினார். முன்னாள் உயர்நீதிமன்ற நடுவர் என். கிருட்டிணசாமி ரெட்டியார், புலவர் ந. ரா. முருகவேள், அறச்சுடர் திரு சு. முத்து லிங்கா ரெட்டியார், கவிஞர் முத்து முருகன், ஏ சங்கரய்யா, சு. இரகுபதி ஆகியோர் வாழ்த்துரை வழங்கினர்.

## தருமபுரம் பி. சாமிநாதன் அவர்கட்குப் பாராட்டுவிழா

தமிழகத்தின் தலைசிறந்த ஓதுவார், கலைமாமணி தருமபுரம் பி. சாமிநாதன் அவர்கள் அரசவைக் கலைஞர் பதவி ஏற்றதைப் பாராட்டுமுகத்தான், தருமையாதீன மதுரைக் கிளை குருஞான சம்பந்தர் பணிமன்றச் சார்பில் 23—1—85இல், மதுரைத் திருவள்ளுவர் கழக வளாகத்தில் கி. பழனியப்பனார் தலைமையில் பாராட்டுக் கூட்டம் நடைபெற்றது திரு. பி. டி ஆர். கமலத் தியாகராசன் வரவேற்புரை நிகழ்த்தினார் கருமுத்து சு. சொக்கலிங்கம் செட்டியார் பொன்னாடை போர்த்தி வாழ்த்துரை வழங்கினார்.

## மதுரைத் திருவள்ளுவர்கழக 43வது ஆண்டுநிறைவுவிழா

சனவரி 14, 15, 16, 17ஆம் நாட்களில், வடக்காடி வீதி அருள்மிகு மீனாட்சி சுந்தரர் திருக்கோயிலில், முறையே தமிழர் திருநாள், தி. ப, சு. நினைவு விழா, தமிழவேள் நினைவு விழா, மதுரை இந்து சமய எழுச்சி மன்ற விழா ஆகியன சிறப்பாக நடைபெற்றன. விழாவில் பெருமக்களும், புலமைச் சான்றோர்களும் கலந்துகொண்டு சிறப்புரைகள் ஆற்றினர்.

## கழகக் கிளைமேலாளர் திரு. மீனாட்சி சுந்தரம் மறைவு

கழகத்தின் கோயமுத்தூர் கிளை நிலைய மேலாளராகப் பணியாற்றிவந்த திரு. மே. மீனாட்சி சுந்தரம் அவர்கள் சில நாட்களாக நோய்வாய்ப்பட்டிருந்து 5—1—85 இல் தமது 55ஆம் அகவையில் காலமானார் என்ற செய்தியை வருத்தத்துடன் தெரிவித்துக்கொள்ளுகிறோம். சென்னைத் தலைமைக் கழகத்தில் ஏறத்தாழ 15 ஆண்டுகளும், கோவைக் கிளையில் 20 ஆண்டுகளுமாக 35 ஆண்டுகள் பணியாற்றியுள்ளார். இவருக்கு ஆண் மக்கள் இருவரும் பெண்மக்கள் ஒருவரும் உளர். அவர்தம் குடும்பத்தார்க்கு எமது ஆழ்ந்த இரங்கலைத் தெரிவித்துக்கொள்கிறோம்.



## முன்னாள் கழகப் பணியாளர் திரு. செல்வராசு மறைவு



கழகத்தில் ஏறத்தாழ 45 ஆண்டுகள் பணியாற்றி, நூல் விற்பனைக்கு ஆக்கமளித்து வந்த திரு. எஸ். டி. செல்வராசு அவர்கள் கடந்த 16—1—85இல், தமது 69ஆவது அகவையில் திருநின்றவூரில் காலமானார் என்ற செய்தியறிந்து வருந்துகிறோம். இவருக்கு ஆண் மக்கள் மூவரும் பெண் மக்கள் ஐவரும் உளர். அவர்தம் குடும்பத்தார்க்கு எங்கள் ஆழ்ந்த இரங்கலைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

—ஆசிரியர்.

## பாரதி அன்பர்களுக்கு வேண்டுகோள்

அண்மையில் நடைபெற்ற மகாகவி பாரதியார் நூற்றாண்டு விழாவைப்பற்றிய பல்வேறு செய்திகளைத் தொகுத்து நூலொன்று உருவாகி வருகிறது.

தமிழகத்திலும் அயல் மாநிலங்களிலும் வெளி நாடுகளிலும் உள்ள பாரதி சங்கங்கள், பாரதி அன்பர்கள் ஆகியோர் இயன்ற குறிப்புகளையும் விவரங்களையும் தந்துதவ வேண்டுமாறு பாரதி அன்பர் எதிரொலி விசுவநாதன் தலைமையில் அமைந்துள்ள நூற்குழு பொது மக்களைக் கேட்டுக்கொள்கிறது. தொடர்புக்கு : காவியம் 5, நேதாஜி தெரு, சீனிவாச நகர், சென்னை-600 063.

## திருநெல்வேலித் தனித்தமிழ் இலக்கியக் கழகம் நடத்திய கட்டுரை, பேச்சுப் போட்டி முடிவுகள்

பாவாணர் பெருவிழா, நிகழும் இவ்வாண்டு தமிழகக் கல்லூரி மாணவ மணிகளுக்காக நெல்லைத் தனித்தமிழ் இலக்கியக் கழகம் நடத்திய ஆராய்ச்சிக் கட்டுரைப் போட்டியில் "தேவநேயப் பாவாணரின் தமிழ்த் தொண்டு" என்னும் பொருள் குறித்து மயிலாடுதுறை ஏ. வி. சி. கல்லூரி மாணவர் ய. மணிகண்டன் எழுதிய கட்டுரைக்கு முதற் பரிசாக அவருக்குத் தங்கப் பதக்கமும் அவர் பயிலும் கல்லூரிக்குத் த. பி. சொ. அரிராம் சேட்டு நினைவுச் சுழற் கோப்பையும், இரண்டாவது பரிசு திருச்சி தூய வளனுர் கல்லூரி மாணவர் நா. இராசேந்திரனுக்கும், மூன்ருவது பரிசு மதுரை வேளாண்மைக் கல்லூரி மாணவர் மு. செல்வ நாயகத்துக்கும் வழங்கப்படும்.

நெல்லை—குமரி மாவட்ட மாணவர்க்காக நடந்த பேச்சுப் போட்டியில் கள்ளிகுளம் நாடார் சங்கக் கல்லூரி மாணவர் சோம சுந்தரத்திற்கு முதற் பரிசாக உருபா நூற்றைம்பது மதிப்புள்ள தமிழ் நூல்களும் மாவட்ட ஆட்சித் தலைவரின் நாவலர் சுழற் கோப்பையும் வழங்கப்படும். இரண்டாவது பரிசினைப் பாளை. சதக்கத் துல்லா அப்பா கல்லூரி மாணவர் பால சுப்பிரமணியனும் மூன்ருவது பரிசினைப் பாளை. தூய யோவான் கல்லூரி மாணவர் வேங்கட சுப்பிரமணியனும் பெறுகின்றனர்.

## மறைமலையடிகள் நூலக வளர்ச்சிக்கு நன்கொடை

(முன் இதழ் உகங-ஆம் பக்கத் தொடர்ச்சி)

| | | |
|---|---|---|
| உயர்திரு. இரா. முத்துக்குமாரசாமி அவர்கள் (கழக ஆட்சியர்) | 10 | 00 |
| திரு. ஆ. சுப்பையா பிள்ளை அவர்கள் (கழக மேலாளர்) | 5 | 00 |
| கயப்பாக்கம் திரு. முத்துலிங்கா ரெட்டியார் அவர்கள் | 5 | 00 |
| திரு. A. T. A. ஈஸ்வர் அவர்கள் | 5 | 00 |
| திருமுருக விசாக நம்பி அவர்கள் | 5 | 00 |
| சூரன்குடி திரு. அ. ஆறுமுகம் அவர்கள் | 5 | 00 |
| கல்லை. தே. கண்ணன் அவர்கள் (ஆசிரியர் 'வள்ளுவர்வழி') | 5 | 00 |
| தூத்துக்குடி திரு. ந. ஆறுமுகம் பிள்ளை அவர்கள் (மார்கழி) | 10 | 00 |
| திரு. பல்லடம் மாணிக்கம், விருத்தாசலம் | 25 | 00 |
| டாக்டர் இரா. இளவரசு | 10 | 00 |
| திரு. மா. அண்ணுதுரை, நூலகர் ஈரோடு | 10 | 00 |
| பேராசிரியர் திரு. ப. சோதிமுத்து, மதுரை | 50 | 00 |

---

தென்னிந்திய தமிழ்ச் சங்கத்திற்காக
80, பிரகாசம் சாலை, சென்னை-108. அப்பர் அச்சகத்தில்
திரு. இரா. முத்துக்குமாரசாமி அவர்களால் அச்சிடப்பெற்றது.
ஆசிரியர்: இரா. முத்துக்குமாரசாமி, எம். ஏ., பி. லிப்.

## கழகப் புதிய வெளியீடுகள்

| | | |
|---|---|---|
| இந்திரா பிரியதர்சினி—கழகப் புலவர் குழு | 5 | 00 |
| அறிவியல் களஞ்சியம்—இராம்குமார் | 7 | 00 |
| நட்பின் ஒளி—புலவர் தி. நா. அறிவுஒளி | 6 | 00 |
| பேகன் கவிதைகள்—கவிஞர் பேகன் | 7 | 00 |
| கலைவளர்த்த திருக்கோயில்கள்—டாக்டர் கலைக்கோவன் | 15 | 00 |
| தமிழர்தம் தனிப்பெருங் கடவுள்—தி. இராசமாணிக்கம் | 10 | 00 |
| ஐந்திலக்கணத் தொன்னூல் விளக்கம் | 35 | 00 |

## அருள்மிகு தண்டபாணி அடிகளின் நூல்கள்

| | | |
|---|---|---|
| திருச்செந்திற் சேவை | 8 | 00 |
| முசுகுந்த நாடகம் | 4 | 00 |
| சிதம்பரம் பாண்டிய நாயகன் பிள்ளைத் தமிழ் | 5 | 00 |
| தேவகோட்டை முருகன் பிள்ளைத்தமிழ் | 4 | 00 |
| சென்னை கந்தகோட்டம் பிள்ளைத்தமிழ் | 5 | 00 |

## தமிழ்ப் பல்கலைக் கழக வெளியீடுகள்

| | | |
|---|---|---|
| மராட்டியர் செப்பேடுகள் (ஆங்கிலச் சுருக்கத்துடன்) —புலவர் செ. இராசு | 150 | 00 |
| கலித்தொகை (மறுபதிப்பு)—நச்சினார்க்கினியர் உரை —இ. வை. அனந்தராமையர் பதிப்பு | 150 | 00 |
| சங்க இலக்கியக் கருத்தரங்கு கட்டுரைகள் | 30 | 00 |
| ஆராய்ச்சித் தொகுதி—மு. இராகவையங்கார் | 100 | 00 |
| தொல்-சொல்-தெய்வச்சிலையார் உரை | 60 | 00 |
| தொல்காப்பியம்-நன்னூல்-சொல்லதிகாரம் —க. வெள்ளைவாரணனார் | 75 | 00 |
| நன்னூல் காண்டிகை உரை—ஆறுமுக நாவலர் பதிப்பு | 65 | 00 |
| பெரிய திருமொழி உரையும் தமிழாக்கமும் —டாக்டர் தெ. ஞானசுந்தரம் (நூலகப் பதிப்பு) | 180 | 00 |
| (பொதுப் பதிப்பு) | 130 | 00 |
| நீலகேசி (உரையுடன்) —பேரா. சக்கரவர்த்தி நயினார் பதிப்பு | 140 | 00 |
| சட்டவியல்—பேரா. மா. சண்முகசுப்பிரமணியம் | 92 | 00 |
| ,, ,, (பொதுப் பதிப்பு) | 36 | 00 |
| தஞ்சை மராட்டிய மன்னர்களின் அரசியலும் சமுதாய வாழ்க்கையும்—பேரா. கே. எம். வேங்கடராமையா | 155 | 00 |

நூல்கட்குக் கழிவு 25%—அஞ்சற் செலவு தனி. பணவிடை மூலம் அல்லது வரைவோலை மூலம் கட்டணங்கள் அனுப்பலாம்.

விவரங்களுக்கு:

பதிப்புத்துறை இயக்குநர்,

தமிழ்ப் பல்கலைக் கழகம், தஞ்சாவூர்-613 001.

## "செந்தமிழ்ச் செல்வி"

| ஆண்டுக் கையொப்பம் | | வாழ்நாள் கையொப்பம் | |
|---|---|---|---|
| உள்நாடு ரூ. | 20 - 00 | உள்நாடு ரூ. | 200 - 00 |
| வெளிநாடு ரூ. | 80 - 00 | வெளிநாடு ரூ. | 600 - 00 |



கருணைமாரி பொழியும் கருமாரியின் புகழ்பரப்பும்
திங்கள் ஏடு
தெய்வீகத் தமிழ் வளர்க்கும்
செந்தமிழ்த் திங்களேடு

# ஸ்ரீ தேவி கருமாரியம்மன் விஜயம்

(மாத இதழ்)

ஆசிரியர் :

திருவேற்காடு அருட்கவியரசு,
தவத்திரு. ஸ்ரீ தேவி கருமாரிதாச சுவாமிகள்

* பக்திச் சுவைமிகுந்த இலக்கியக் கட்டுரைகள்
* தெய்வத் தமிழை வளர்க்கும் ஆங்கிலக் கட்டுரைகள்
* ராசி மிகுந்த ராசிபலன்
* இன்னும் பற்பல அம்சங்கள் கொண்டது:

| | | |
|---|---|---|
| ஆண்டுச் சந்தா | ரூ. | 24 00 |
| ஆயுள் சந்தா | ரூ. | 251 00 |

விவரங்களுக்கு :

## ஸ்ரீ தேவி கருமாரியம்மன் விஜயம்

சூப்பர் பவர் பப்ளிகேஷன்ஸ்
152, (முதல் மாடி) தம்புசெட்டித் தெரு,
சென்னை-600 001.
தொலைபேசி: 21595


அப்பர் அச்சகம், சென்னை - 600 108.